# அதரம் மதுரம்

மகரிஷி



சுவாதி பதிப்பகம்
எண்: 13, ரெட்டி தெரு,
ஆலந்தூர், சென்னை - 600 016.
☎ 22326662, 24743688

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூல் | : | அதரம் மதுரம் |
| ஆசிரியர் | : | மகரிஷி |
| பொருள் | : | நாவல் |
| மொழி | : | தமிழ் |
| முதற் பதிப்பு | : | நவம்பர் 2004 |
| தாளின் தன்மை | : | 11.6 கி.கி.வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 18.5 X 12.5 செ.மீ. (கிரௌன்) |
| அச்சு எழுத்து | : | 11 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | : | 128 |
| கணிப்பொறி அச்சு | : | சூர்யா கிராபிக்ஸ்<br>சென்னை - 600 015 |
| வெளியிட்டாளர் | : | சுவாதி பதிப்பகம்<br>13, ரெட்டித்தெரு, ஆலந்தூர்<br>சென்னை - 600 016 |
| அச்சிட்டோர் | : | சரவணா ஆப்செட் பிரிண்டர்ஸ்<br>சென்னை - 600 0[illegible] |
| விலை | : | ரூ.35.00 |






# பதிப்புரை

சிறந்த எழுத்தாளனுடைய எழுதுகோல் நாட்டின் சீர்கேடுகளை, அவலங்களைச் சரி செய்து நாட்டை நன்னிலைக்குத் தூக்கி நிறுத்தும் நெம்புகோலாகும்.

மகரிஷி ஒரு மகத்தான எழுத்தாளர். சிந்தனையாளர். அவருடைய அனுபவமுள்ள எழுத்து தற்கால இலக்கியத்திற்கு அணி செய்துள்ளது.

நாவலும் கதையும் வாழ்க்கைப் போக்கினைச் சித்திரிப்பதால் மனித மனம் அவற்றைப் படிப்பதில் மிகுந்த ஆர்வம் காட்டுவது இயற்கை. நாவல் வாழ்க்கையோடு இயைந்ததாக அமைய வேண்டும். மக்கள் இயல்பான வாழ்க்கை நிலையில் இருந்து அவர்களின் வாழ்க்கை பெருமை மிக்கதாக உயர்ந்த வாழ்க்கையாக அமைய நாவல் உதவ வேண்டும்.

நாவலுக்கு இப்படி எத்தனையோ இலக்கணங்கள் இருந்தாலும் ஒவ்வொரு சிறந்த நாவலும் அந்நாவலுக்கு இலக்கணமாகவே அமைகிறது.

மகரிஷியின் இந்த 'அதரம் மதுரம்' நாவலுக்கு இலக்கணம் இந்நாவலே என்றால் மிகையல்ல.

சாருலதா செல்வச் செழிப்பிலே செம்மாந்து பூத்துக் குலுங்கி மணம் பரப்பிக் கொண்டிருக்கும் முல்லை. அவள் கொள்ளையழகும் செல்வ வளமும் கண்டோர் முகர்ந்து கசக்கி எறிந்திட எத்தனித்தனர்.

சாருலதா, கண்டு எடுத்த விநோத மனிதன் விநோத்தின் வரவால் வாடிய அவள் வாழ்வு வசந்தமாகிறது.

இந்நாவலில் மனவளர்ச்சி பாதிக்கப்பட்டவன் மணவாழ்க்கைக்கு ஏற்றவனா? தன்னை விட வயதில் இளையவனை மணப்பதால் ஏற்படும் பிரச்சினைகள் போன்ற கருத்துகளை நாவலின் மையக் கருத்தாக எடுத்துக் கொண்டு அலசித் தீர்வு கண்டிருக்கிறார் ஆசிரியர்.

வர்மக்கலை, மாந்திரீகம், தாந்திரீகம் பற்றியெல்லாம் இந்நாவலின் ஊடே விளக்கப்பட்டுள்ளது. ஆசிரியருக்கு இக்கலைகளில் உள்ள ஆர்வம் பளிச்சிடுகிறது.

எழுத்தும் நடையும் இயல்பான நீரோட்டமாகச் செல்கின்றன. நல்ல நூல்களுக்கு வாசக அன்பர்களின் நல்லாதரவு என்றுமே உண்டு என்ற நோக்கில் சுவாதி பதிப்பகம் இந்நாவலை வெளியிடுகிறது.

அன்புடன்

ம. சசிரேகா

**சுவாதி பதிப்பகம்**

# அதரம் மதுரம்

## 1

தோட்டத்தில் உள்ள அடர்த்தியான செடிகளுக்கு "ஹோஸ்" பைப் வழியாகத் தண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள் சாருலதா.

சுடிதாரில் ஒரு முப்பது வயதைத் தொட்டுக்கொண்டிருக்கும் அழகான வளர்ச்சி. தலைக்கேசம் இரண்டாக மடிக்கப்பட்டுத் தொங்கியது. சற்றே நீளமான முகம். எடுப்பான நாசி. சிவப்பும் வெண்மையும் கலந்த நிறத்தில் உடம்பு நீளமான சிவந்த கைகள். ஹோஸ் பைப்பில் தண்ணீர் பீய்ச்சி அடிக்கும்போதும், செடிகளுக்கு மாற்றும்போதும் மேலேபடும் தண்ணீரால் முன் உடம்பு கிட்டதட்ட முக்கால்வாசி நனைந்த உடை உடம்புடன் ஒட்டிக் கொண்டிருந்தது. கவர்ச்சிகரமான உடம்பின் கனபரிமாணங்கள் வேடிக்கைப் பார்ப்பவர்களை நிச்சயமாகப் பலவந்தமாக நிற்கவைத்துவிடும். ஆனால், தோட்டப்பகுதியிலிருந்து சாலை ரொம்ப தூரத்தில் இருந்தது ஒரு சவுகரியம். ஆனால், பக்கத்துப் பங்களாவின் வயதான மனிதர் ஒருவர் மேல்ஜன்னல் கதவைக் கொஞ்சமாக திறந்துகொண்டு கவர்ச்சியை ரசித்துக் கொண்டிருந்தது சாருவுக்குத் தெரியாது.

ஏற்காடு மலைப்பகுதி. ஊரைவிட்டு லண்டன் பயணமாகிவிட்ட ஓர் ஆங்கிலேயரிடம் அவள் தந்தை முன்பு வாங்கிப் போட்ட பிரும்மாண்டமான சலவைக் கல் பங்களா அது. சுவர் பகுதியைவிடக்

கண்ணாடி ஜன்னல்களே அதிகம். தேவதாரு மற்றும் மலைத் தேக்கினாலான ஜன்னல்கள். உயர உயரமான நிலை வாயிற்படிகள். லஸ்தர்விளக்குகள் மாதிரியே கொத்துக் கொத்தாகத் தொங்கும் மின்விளக்குகள். தோட்டப்பகுதியில் கூட உயரக்குறைவான இரும்புக் கம்பங்களில் மின்விளக்குகள் குண்டுகுண்டாக உட்கார்ந்திருந்தன.

கமலா, ஆரஞ்சு மரத்திற்கு நீர்விட்டுக் கொண்டிருந்தவள் தூரத்தில் உள்ள பெரிய இரும்பு கேட் திறக்கப்படும் ஓசைக்கேட்டு திரும்பிப் பார்த்தாள்.

சுப்புடுமாமா ஓர் உயரமான வாலிபனுடன் உள்ளே வந்து கொண்டிருந்தார்.

சுப்புடுவுக்கு வயது ஐம்பதுக்குமேல் இருக்கும். குள்ளமான உருவம். தலையில் அதிக கேசமில்லை. கணுக்கால் தெரிகிற மாதிரி வேஷ்டி. தடிமனான அரைக்கை ஜிப்பா. அதன்மேல் வர்ணம் என்னவென்று கண்டுபிடிக்க முடியாதபடி ஒரு துண்டு. எப்பொழுதும் குனிந்த தலையுடன் நடை. சாருலதாவின் அப்பா காலத்திலிருந்தே பழக்கம். ஒரு இடத்தில் நிரந்தரமாக நின்று வேலை செய்யமாட்டார். தலைக்குமேல் வேலை இருப்பதுபோல ஊராரின் வேலையை இழுத்துப் போட்டுக்கொண்டு அலைகிற சுபாவம். பெரியபெரிய குடும்பங்களில் பழக்க மேற்படுத்திக்கொண்டு அவர்களுக்குத் தேவையானதைச் சலிப்பின்றிச் செய்வார். பொதுவில் மிக நல்ல மனிதர்; பரோபகாரி.

அவர் கூட வரும் வாலிபனைத் தூரத்திலிருந்தே சாருலதா பார்த்தாள். சாட்டின் துணியில் தொடையை இறுக்கின மாதிரி அரைநிக்கர், நீல வண்ணத்தில் அரைக்கை பனியன்.

இந்த ஏற்காடு குளிரில் இப்படி வருகிறானே அவனுக்குக் குளிரவேயில்லையா என்று எண்ணிக்கொண்டாள்.

"வாங்க... வாங்க... எங்கே ரொம்ப நாளா ஆளையே காணோம்... கார்க்கில் சண்டைக்குப்பின் சர்வீஸ் செய்ய அங்கேதான் போயிட்டீங்களோன்னு நெனச்சேன்" என்றாள் புன்னகையுடன்.

"போயிருக்கலாம். சென்னையிலிருந்துகூட ஒரிசா வெள்ள நிவாரணப்பணிக்குப் பலபேர் போனாளாம். அங்கே இருந்திருந்தா அந்தப் பாக்கியமாவது கிடைச்சிருக்கும்"

மிக அருகில் வந்தபின்தான் அந்த வாலிபனின் முகத்தைப் பார்த்தாள். வாலிப்பான உடல்வாகு. நன்றாக வளர்ந்திருந்தான். ஆனால், முகத்தில் ஒரு குழந்தைத் தனம் அப்படியேயிருந்தது. பெரிய பங்களா, அதன் தோட்டப்பகுதிகளை நிமிர்ந்து பார்த்து வியப்புடன் வந்தான்.

யார் இவன்? இந்த வயதில் சுப்புடுவுக்கு இப்படியொரு மகனா. அவருக்கு மகன்கள் உண்டு. அவர்கள் சேலத்தில் வெவ்வேறு வேலைகளில் இருக்கிறார்கள் என்று அவரே முன்பொருமுறை கூறியிருக்கிறார். அப்படியானால் இவன்?

சுப்புடுவுடன் கூட வந்த வாலிபன் அவள் கையில் இருந்த ஹோஸ் பைப்பை அவள் கையிலிருந்து பிடுங்காத குறையாகத் தன்னிடம் இழுத்துக்கொண்டான். அங்குள்ள செடிகளுக்கு அவனே தண்ணீர் விட ஆரம்பித்துவிட்டான். அப்பொழுது அவன் முகத்தில் திடீரென ஓர் உற்சாகம். பள்ளிச்சிறுவன் போலச் சுறுசுறுப்பு. தடுப்புகளை உடைத்துக்கொண்டு வெளியே போகும் நீரை அதன் அருகில் போய் மண் அணைத்துத் தடுத்தான். கையைச் சாட்டின் அரை நிக்கரில் துடைத்துக் கொண்டான். வேகமாக வரும் தண்ணீரைத் தன் மேலும் விட்டுக்கொண்டான். குழந்தைத்தனமான அவன் செய்கைகளை ஆச்சர்யத்துடன் பார்த்தாள் அவள்.

"மாமா இவன்... இவர்...?"

"பரம சாது. அணில் மாதிரி சுறுசுறுப்பா இருப்பான். படிச்சிருக்கான். ஏழைக்குடும்பம். என்னமோ தெரியல கொஞ்சம் மனவளர்ச்சி குன்றியவன் போல இருப்பான். ஆனால் இவனால் யாருக்கும் எந்தவிதத் தொந்தரவும் வராது. உன்னை ஒரு தடவைப் பார்த்தாப் போதும். அப்படியே படம் போட்டுடுவான்."

அவர்கள் பேசிக்கொண்டே அங்கிருந்த தேவதாரு மரத்தின் நிழலில் வந்து நின்றனர். அங்கு ஏற்கனவே இரண்டு பிரம்பு நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அதில் உட்கார்ந்தனர்.

''வயசுதான் இப்படி ஆகிறதே தவிர, ஒரு பதினான்கு வயது சிறுவனுடைய பழக்க வழக்கம்தான் இவனிடம் இப்போ இருக்கு.''

''பிறவியே இப்படியா?''

''இல்லே, இருபது வயதுவரை நன்றாகத் தானிருந்திருக்கிறான். ஒரு மோசமான நிகழ்ச்சிக்கப்புறம் உடம்பு வளர்ந்த அளவு மூளை வளர்ச்சியடையலே. அதனால அசடு மாதிரியோ, பயித்தியம் மாதிரியோ இருக்கமாட்டான். துணியைக் கிழித்துக்கொண்டு ஓட மாட்டான். நீ என்ன வேலையைச் சொல்றியோ அதைப் புரிந்து கொண்டு சரியாச் செய்வான். வினோத் என்று அவனாகப் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறான்.''

''அப்படியா?''

''அம்மா, அப்பா அவனுக்கு வச்ச பெயர் சுப்புசாமி. அந்தப் பெயர் பிடிக்கலேன்னு சொல்லிட்டு அவனா வினோத் என்ற பெயரைத் தேர்ந்தெடுத்து வச்சிண்டு இருக்கான். அந்தப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாத்தான் பதில் கொடுப்பான். சுப்புசாமி என்று கூப்பிட்டால் ஒரு முறை முறைத்துவிட்டு அப்பால் போய்விடுவான்.

''வேடிக்கைதான்.''

''வேடிக்கையா? அவன் பழக்க வழக்கங்களே வேடிக்கை யானது. பிராணிகள், பட்ஷிகள் பாஷை தெரியும் என்கிறான். இவன் ஒரு குரல் கொடுத்துக் கூப்பிட்டால் அணில், புறா, பட்ஷிகள் இவனிடம் வருகின்றன. இந்தப் பாஷைகளை எங்கேடா கற்றுக் கொண்டாய் என்று கேட்டால் அது தேவரகசியம், அதைச் சொன்னால் தலை வெடித்துச் சிதறிவிடும் என்று ரொம்ப சீரியஸா சொல்றான்''.

ஹோஸ் பைப்பில் உற்சாகமாகச் செடிகளுக்குத் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்த வினோத் திடீரென்று அங்கிருந்த மரமொன்றில் ஏறுவதைப் பார்த்துப் பதட்டமடைந்தாள்... ஏய்... வினோத்... அந்த மரத்தில் ஏறாதே. அதிலே ஒரு பொந்து இருக்கு. அதில் நாகப்பாம்பு இருக்கறதைப் பலபேர் என்னிடம் சொல்லியிருக்காங்க. நானும் பார்த்திருக்கேன். வேண்டாம். இறங்கிவா..."

உட்கார்ந்திருந்த சாருலதா மரத்தடிக்கு ஓடிவந்தாள். பின்னாலேயே சுப்புவும் நிதானமாக வந்தார். சாருலதா கத்துவதைக் காதில் வாங்கிக்கொண்டே அவன் மரத்தின் மேலே ஏறினான். அவள் அந்த மரத்தில் எந்தப் பொந்தில் பாம்பு இருக்கிறதென்று சொன்னாளோ அதில் எவ்விதப் பயமுமின்றிக் கையை விட்டான்.

"சுப்புடு, அவனைக் கீழே இறங்கச் சொல்லுங்க..." அவள் பயத்தில் கத்தினாள்.

சுப்புடு அவள் அளவு பயப்படவில்லை.

ஏதேனும் விபரீதம் நடந்து விடக்கூடாதே என்கிற அச்சத்தில் சாருலதா தொடர்ந்து கத்தினாள்,

"வினோத் வேண்டாம். அந்தப் பொந்தில் கை விடாதே. கீழே இறங்கி வா... மாமா நீங்களாவது சொல்லுங்களேன்."

இவ்வளவு கூச்சலுக்குப்பிறகு வினோத் நிதானமாக மரத்திலிருந்து கீழே இறங்கிவந்தான்.

அவன் தோளில்...

சாருலதா பயத்தில் கண்களை மூடிக்கொண்டு கத்தியே விட்டாள்.

வினோத்தின் தோளில் ஈரத்துண்டு மாலையாகத் தொங்குவது போல, ஆறடி நீளத்திற்கு அந்தப் பாம்பு நெளிந்து தொங்கிக் கொண்டிருக்க, அதன் வாய்ப்பகுதியை மட்டும் அவன் பிடித்தபடி அவள் அருகில் வந்து நின்றான்.

''பயப்படாதே, இவனுக்கு இதை அடக்கி ஆள்கிற ரகசியம் தெரியும். எப்படிப்பட்ட விஷப்பாம்பையும் பிடித்து விடுவான். நான் சொல்லவில்லை, இவன் பழக்க வழக்கங்களே வேடிக்கையாக இருக்கும். இவன் நம் அருகில் இருக்கும்போது எதற்கும் பயப்படவே வேண்டாம்.''

அவள் சுப்புடுவுக்குப் பின்னால் போய் பயத்துடன் நின்றாள்.

பாம்பு அவன் கையில் இருக்கும்போதே படமெடுத்தது. அதை அவன் அன்புடன் வருடினான். இது அவனிடம் ஏதோ மந்திரத்திற்குக் கட்டுப்பட்ட மாதிரி நடந்து கொண்டது. படத்தைச் சுருக்கிக் கொண்டு அவன் மேல் ஆலிங்கனித்து ஊர்ந்தது. அவன் முகத்திற்கு அருகில் தன் வாயைக் கொண்டுவந்தது.

''உனக்குப் பயமே இல்லையா?''

''பயமா... பிராணிகள்தான் மனுஷன கண்டு பயப்படறது; தன்னை ஹிம்சை செய்வதற்கென்றே இவர்கள் பிறந்தவர்கள் என்று நம்மைக் கண்டு அது பயப்படறது. நாம் அவைகளிடம் ஒருபோதும் அன்பாகவே இருக்கறதில்லை. எல்லாப் பிராணிகளும் நமக்கு எதிரி என்கிற கண்ணோட்டத்திலேயே பாக்கறோம். பிராணிகளுக்கு நாம் விரோதியில்லை. அதற்குச் சினேகமானவனே என்பதைப் புரியவச்சுட்டா எல்லாப் பிராணிகளும் நம்மிடம் சினேகமாயிடும். அது நம்மை ஒண்ணுமே பண்ணாது.''

பேசிக்கொண்டே அவன் அந்தப் பாம்பைக் கீழே விட்டான். அதை வாஞ்சையுடன் வருடியபடி,

''போடா! உன்னோட இடத்துக்குப் போ. மரப்பொந்துக்கு இல்லே... இங்கே இருந்தா வேற யாராவது உன்னைப் பார்த்தா சாக அடிச்சுடுவா... நீ எங்கேருந்து வந்தியோ அங்கே போ... நீ எதுக்காக இங்கே வந்தேங்கறத அப்புறமா பேசிக்கலாம்...''

மனிதர்களிடம் பேசுவது போலப் பாம்பிடம் பேசும் அவனை வியப்புடன் பார்த்தாள் சாருலதா. சற்றுமுன் சீரலுடன் படமெடுத்து

ஆடி பின்பு படத்தைச் சுருக்கிக் கொண்ட நாகம் மரப்பொந்திற்குப் போகாமல் தோட்டப்பகுதி பக்கம் ஊர்ந்து பின்பு மலைச்சரிவில் நெளிந்தோடியது.

பிராணிகள் பட்ஷிகள் இவனிடம் பயப்படுவதேயில்லை. ஏதோ குரல் கொடுக்கிறான் ஓடிக்கொண்டிருக்கும் அணில் முன்னங்காலைத் தூக்கிக்கொண்டு அப்படியே உட்கார்ந்து இவனைப் பார்க்கிறது. அருகில் சென்று மேலே எடுத்து விட்டுக்கொள்கிறான். அது அவன் உடம்பு பூராவும் சுற்றிக்கொண்டிருக்கும். அவர்கள் பேசிக்கொண்டே பங்களாவுக்குள் நுழைந்தார்கள் அவர்களுக்குப் பின்னால் வந்த வினோத்தின் தோளில் ஒரு 'மைனா' உட்கார்ந்திருந்தது.

முன் ஹாலில் வந்து நின்ற வினோத் அதன் நேர்த்தியைக் கண்டு அப்படியே பிரமித்துப்போனான். ஆங்கிலேயர்கள் இருந்தது இருந்தபடியே விட்டுச் சென்ற பங்களாவானதால் சுவ்ரெங்கிலும் ஏராளமான வெளிநாட்டு ஓவியர்களான டிடியன், வான்காக், ப்ரியூகல் போன்றோரின் மறுபதிப்பு ஓவியங்கள் பெரிய அளவில் கண்ணாடி பிரேமுக்குள் இருந்தன. ஒரு சமயம் அவற்றை அப்புறப்படுத்த அவள் பெற்றோர் முயன்றபோது அதற்கு அவள் இடந்தரவில்லை. அவற்றுடன் நமது ஓவியர்களின் ஓவியங்களையும் சேர்த்து மாட்டியிருந்தாள்.

ஹாலில் வந்து நின்றவன், ரூபன் என்ற பாரிஸ், நகர ஓவியர் வரைந்த ஜெட்ஜ்மெண்ட் ஆப் பாரிஸ் என்ற படத்தின் முன் நின்றான். அதன் அருகிலேயே லியானார்ட் டாவின்சி வரைந்த உலகப் புகழ் பெற்ற மோனோலிஸாவும் இருந்தது. இவற்றை ரசிக்க ஒரு உண்மையான கலையுள்ளம் கொண்ட ஒருவனாலேயே முடியும். அப்படத்தின் முன் ஒரு லயிப்புடன் நின்ற அவனுடைய ரசிகத்தன்மையைப் பார்த்து அவள் சந்தோஷப்பட்டாள்.

இவன் படித்துக்கொண்டிருந்தபோது பீதாம்பர வித்தையில் மிகப்பிரபலமான இவன் பெரியப்பா இவனைத் தன் வாரிசாக்கிக் கொள்ள ஆசைப்பட்டுத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போய்விட்டார். அவரிடம் இவன் சிஷ்யன் போலவும் அவர் மகன்

போலவும் இருந்தான். தனக்குத் தெரிந்த வித்தைகள், மந்திரங்கள், தந்திரங்கள் என்று எல்லாவற்றையும் கற்றுக்கொண்டான். அப்பா, அம்மாவினால் இவனை ஒழுங்கா படிக்கவைக்க முடியலேங்கறதுக்காக, அவர் இவனைப் பள்ளிக்கூடம், அது முடிந்தவுடன் காலேஜ் என்று படிக்கவும் வைத்தார்.

"காலேஜில் கூட படிச்சிருக்கானா?"

"ஆமாம். ரெண்டு வருஷமோ மூணு வருஷமோ போயிருக்கான். படிப்போடக் கூடத்தான் பிதாம்பர வித்தைகளையும் கற்றுக்கொண்டான்.

பிதாம்பர வித்தை என்பது மந்திரத்தில் மாங்காய் வரவழைக்கும் விஷயமல்ல. அதற்கு அடிப்படையே யோகாப் பியாசம்தான். சுய நினைவு உள்ளுக்குள் அடக்கி உடம்பைக் காற்று மண்டலத்துடன் ஐக்கியப்படுத்த வேண்டும். உடம்பு கணம் குறைந்து காற்றில் மிதப்பதுபோல மேலே எழும்பிச் சில நிமிஷங்கள் அந்தரத்தில் நிற்கும்.

இந்த யோகப்பயிற்சியை அவர் வித்தை காட்டப் போகிற இடத்தில் எல்லாம் செய்துகாட்டுவார். அந்தரத்தில் உட்கார்ந்த நிலையில் அல்லது படுத்த நிலையில் செய்து காட்டுவார். சிதம்பரம் செய்யும் கடைசி ஐட்டம் இதுவாகத்தானிருக்கும். அந்த அந்தர் தியான நிகழ்ச்சி பார்க்கவே ஒரு கூட்டம் கூடும். போகிற இடத்தில் எல்லாம் இவரே செய்து கொண்டிருந்தவர் ஒரு உண்மையான சிஷ்யனாக விேனாத் கிடைத்தவுடன், இந்த வித்தைக்கு அவனைத் தயார்படுத்தி விட்டார். அவனும் அதை ரொம்ப சீக்கிரமாகவே கற்றுக் கொண்டு விட்டான்.

இப்படித்தான் ஓர் ஊரில் ஒரு பள்ளிக் கூட மைதானத்தில் வித்தை காட்டிக் கொண்டிருந்தார். நிகழ்ச்சியின் உச்சக்கட்டம் அந்தரத்தில் சயனித்திருப்பது போன்ற கடைசி நிகழ்ச்சி.

காவிநிற கூடாரம். நான்கு பக்கமும் காவித்துணி மறைப்பு. சற்றுநேரத்தில் நான்கு உதவியாளர்கள் காவித் துணியால் மறைக்கப்பட்டிருந்த துணி கூடாரத்தை அப்படியே அகற்றினார்கள்.

வினோத் எவ்வித பிடிப்புமின்றி அந்தரத்தில் சயனித்திருந்தான். சில வினாடிகள்தான். அகற்றப்பட்ட துணி கூடாரத்தை மறுபடியும் மறைப்பாக்கினார்கள். இப்பொழுது எந்த மந்திரசக்தியைக் கொண்டு வினோத்தை அந்தரத்தில் உயர்த்தினாரோ அதே மந்திரசக்தியில் அவனைக் கீழே இறக்கவேண்டும். ஆனால், அவர் அப்படிச் செய்வதற்குள் மந்திரவாதிக்கு நெஞ்சுவலி வந்து கீழே விழுந்து விட்டார்.

மேலே அந்தரத்தில் இருப்பவனைக் கீழே இறக்கி அவனுக்குப் பழைய படி சுயநினைவாற்றலை ஏற்படுத்தி முன்பிருந்த பௌதீக நிலைக்கு உடம்பையும் மனதையும் கொண்டு வருவதற்குள் அவருக்கு நெஞ்சுவலி அதிகமாகி இறந்து போய்விட்டார். அவ்வளவுதான். அந்தரத்தில் இருப்பவன் ரொம்ப நேரம் இருக்க முடியாதாகையால் ஒரு குறிப்பிட்ட அவகாசம் முடிந்தவுடன் அந்தரத்தில் இருப்பவன் வெட்டிய மரம் கீழே விழுகிற மாதிரி தரையிலே விழுந்தான். அவனுக்கு உணர்வு வர இரண்டு நாளாகி விட்டது. உணர்வுதான் வந்ததேயொழிய வேறெதுவும் அவனுக்கு நினைவில்லை. அந்த வயதில் இருந்த நினைவு, அனுபவம் செய்கைகள் எல்லாம் அப்படியே தேங்கிவிட்டன. அதற்கு மேல் அது வளரவேயில்லை. ஆனால் உடம்பு...''

வினோத்தைப் பற்றி அவள் கேள்விப்படுவது, அவனது செய்கைகளைப் பார்ப்பது என்று இப்படி எல்லாமே அதிசயப்படும் விஷயங்களாகவே இருந்தன அவளுக்கு.

அவனைப் பற்றி மேலெழுந்தவாரியாகத் தனக்குத் தெரிந்த சில தகவல்களைக் கூறிவிட்டுச் சுப்புடு நேரிடையாக விஷயத்திற்கு வந்துவிட்டார்.

வேலைக்காரப் பெண் பீங்கான் ஜாரில் டீயைக் கொண்டு வந்து வைத்து, கப்களை வரிசையாக வைத்துவிட்டுப் போனாள்.

மூன்று கப்களில் டீயை ஊற்றி சுப்புடுவிடம் ஒன்றைக் கொடுத்துவிட்டுத் தானும் ஒன்று எடுத்துக் கொண்டவள், வினோத்தை அழைத்து அவனிடம் ஒரு கப்பைக் கொடுத்தாள்.

''உனக்குப் பங்களா, தோட்டம் ஆகியவற்றைப் பார்த்துக் கொள்ள ஓர் ஆள் வேண்டுமென்று போன முறை வந்தபோது சொன்னியே அதான் இவனை அழைத்துக்கொண்டு வந்தேன். பத்து நாள் வச்சிண்டு பாரு. சரிபட்டு வரலேன்னா நானே வந்து அழைச்சுகிட்டுப் போயிடறேன்...

''அதைவிட இன்னொரு முக்கியமான விஷயம். நீ கிட்டதட்ட ஒரு சரியான ஆண் துணையில்லாமல் இருக்கே. அம்மா, அப்பா போன பிறகு ரொம்ப பயத்தோட நாளை ஓட்டிண்டு இருக்கறதா சொன்னே. உன் மனதில் கல்யாணம் என்கிற எண்ணமே இல்லே. நானும் நல்லநல்ல வரன்களாகக் கொண்டு வந்து கொடுத்தேன். கல்யாணத்திலே அத்தனை ஈடுபாடு இல்லாம இருக்கே. உன்னிடம் நல்லவன் போல நடந்து, உன் தனிமை உன்னுடைய செல்வாக்கு எல்லாத்தியும் பயன்படுத்திகிட்டு உன்னைப் பலபேர் ஏமாத்திட்டுப் போயிருக்காங்க. காதலிக்கற மாதிரி நடிச்சுட்டு உன்னிடமிருந்து பிரபாகர் பணத்தைச் சுருட்டிக்கொண்டு போனான். பெரிய படிப்பெல்லாம் படிச்சிருக்கேன். எல்லா பொறுப்புகளையும் நான் ஏத்துக்கறேன். கவலையை விடுங்கள் என்று சொல்லிக்கொண்டு வியாபார நுணுக்கங்களைத் தெரிஞ்சுண்டு உன் வியாபாரத்தைக் கெடுத்துவிட்டுப் போட்டி கம்பெனி ஆரம்பிச்சான். தேவதாஸ் உன்னை இன்கம்டாக்ஸில் மாட்டி விட்டுடுவேன் என்று மிரட்டுகிறான். போதாக்குறைக்கு அடிக்கடி டெலிபோனில் மிரட்டுகிறான் அந்தப் பிரபாகரன். உலகத்தில், யாரை நம்புவது என்றே தெரியவில்லை என்று போன தடவை வந்தபோது சொல்லிட்டு அழுதே. வெளிப்படையா தெரிகிற அயோக்யனைப் போலீஸ்ல சொல்லிச் சட்டப்படி தண்டிக்கலாம். இவர்கள் எல்லாம் திரைமறைவில் இருக்கும் எதிரிகள். இவர்களை நாமும் சில திரைமறைவு வேலைகளில்தான் தண்டிக்க வேண்டும்...''

சுப்புடு பேசுவதையே கேட்டுக்கொண்டிருந்த வினோத் ஹாலில் ஒரு மூலையில் வழுவழுப்பாக உள்ள உயரமான தூண் ஒன்றைக் கையால் தடவிப்பார்த்தப்படி நின்றான்.

''வினோத் பார்க்கத்தான் இப்படி அப்பாவி மாதிரி இருக்கானே தவிர, இவனுள் இன்னொரு மனிதன் ஒளிந்து கொண்டிருக்கிறான். அவன் கொஞ்சம் வித்தியாசமானவன். கோபத்தை வெளியே காட்டாமல் எதிரியை அழிக்கிற வித்தை தெரிந்தவன். அந்த இரண்டாம் மனிதன் அவனிடம் எங்கேயோ பதுங்கிப் போயிருக்கிறான். அவனை வெளியே கொண்டு வந்துவிட்டால் போதும். உனக்கொரு சைன்யம் போல இருப்பான். அவனைத் தாண்டி ஒரு ஈ, எறும்புகூட உன்னிடம் வரமுடியாது....''

''மாமா''

''ஆமாம் சாருலதா... அதனால்தான் இவனை இங்கே அழைத்துவந்தேன். இவனை இங்கே வேலைக்கு வச்சுக்கோ.''

''இவனையா... இவரையா ...?''

# 2

''பரவாயில்லை. உன்னைவிடக் கிட்டத்தட்ட அஞ்சு வயது சின்னவனாத்தான் இருப்பான். அவன் இவன் என்றே சொல்லலாம்.''

''அதில்லை மாமா, இவனுக்கு என்ன வேலைத்தெரியும்? இவனை வைத்துக்கொண்டு நான் என்ன வேலை வாங்கமுடியும்?''

சொன்ன வேலையைச் செய்வான். எதிர்த்துப் பேசமாட்டான். ஏமாற்றமட்டான். இவனை இங்கே வைத்துக்கொள்வதில் உனக்கு எவ்வித சிரமமும் இருக்காது. பள்ளிக்கூட டீச்சர் போல அதட்டல் போட்டா போதும்...

''கிட்டத்தட்ட என் உயரத்திற்கு இருக்கிறான். இவர் என்பதா, இவன் என்பதா என்ற குழப்பமே எனக்குப் போகவில்லை. இவனை வைத்துக்கொண்டு எப்படி...''

''முயற்சி செஞ்சு பாரேன். ஒரு பத்துநாளில் இவனை உன்னால் புரிந்து கொள்ள முடியாதா !''

டீயைக் குடித்த வினோத் கைக்கு எட்டும் உயரத்தில் இருந்த ஓவியங்களின்மேல் படிந்திருந்த தூசியைத் துடைத்துக் கொண்டிருந்தான்.

ஆரம்பத்திலிருந்தே அவனது செய்கைகளினால் கவரப்பட்ட சாருலதா இவனைப் பத்துநாட்கள் இங்கே வைத்துக் கொண்டுதான் பார்ப்போமே என்ற முடிவுக்கு வந்தாள்.

"அப்பா அம்மா ரெண்டுபேரும் இங்கிருந்து திருச்சி போகும் வழியில் உள்ள ஸ்ரீனிவாச நல்லூரில் இருக்காங்க. கூடப்பிறந்த அக்கா ஒருத்தி நாலஞ்சு வருஷத்துக்கு முன்னாலே கல்யாணமாகி சேலத்திலே அயோத்தியாபட்டணத்தில் இருக்கா. அங்கெல்லாம் அதிகம் போகமாட்டான். பொய் பேசமாட்டான். கொஞ்சம் அக்கறை எடுத்துக் கொண்டு கவனித்தால் ரொம்ப உதவியா இருப்பான்..."

சிறிது நேர யோசனைக்குப் பின், சரி சுப்புடு ஸார்... பார்க்கலாமே. அப்படியென்ன விபரீதம் நடந்துவிடப் போகிறது. அதையும்தான் பார்த்து விடுவோமே. என்ன கொஞ்சம் அசடு மாதிரி ரெண்டும் கெட்டான் என்பார்களே அப்படியிருப்பான் போலத் தெரியறது... அதையும்தான் பார்த்து விடுவோமே. நீங்க சொல்ற மாதிரி சரிபட்டா வச்சுக்கறது. இல்லேன்னா திருப்பி அனுப்பிடறது... சரி இவனை இங்கே விட்டுட்டுப் போங்க..."

வினோத்தை அருகில் அழைத்தார் சுப்புடு.

"வினோத், இனிமே நீ இங்கேதான் இருக்கணும். இவங்க எந்த வேலை சொன்னாலும் தட்டாம கேட்கணும். எதிர்த்துப் பேசக் கூடாது... இவங்க சொல்ற வேலையைக் கேட்டுகிட்டு சமத்தா இருந்தா அக்கா உனக்கு வேணுங்கறதையெல்லாம் வாங்கிக் கொடுப்பாங்க.... ஒழுங்கா இருப்பியா, அம்மாவை நெனச்சுண்டு அடம்பிடிக்க மாட்டியே"

'சரி' என்பதுபோலத் தலையை ஆட்டினான். நான் பத்து நாளில் வருவேன். அம்மா நினைவு வந்தா கொஞ்சம் மூட்அவுட்டான மாதிரி

உம்மனா மூஞ்சி மாதிரி யாருடனும் பேசாமத் தன் வேலையுண்டு தானுண்டு என்று இருப்பான். பிறகு சரியாகிவிடுவான்..''

சுப்புடு கிளம்பத் தயாரானார்.

''இருங்க நானும் இன்னும் சாப்பிடலே. எல்லோருமா சாப்பிடலாம். சாப்பிட்டுவிட்டே போகலாம்...''

கொஞ்ச நேரத்தில் சாப்பாட்டு மேஜையில் உட்கார்ந்து எல்லோரும் சாப்பிட்டார்கள்.

''இளம் வயசுப் பையன் சாரு, நிறையவே சாப்பிடுவான். இவன் அக்கா வீட்டுக்கு இவன்போகப் பயப்படுவதற்குக் காரணமே இந்தச் சாப்பாடுனாலதான். அங்கே போனா இவனுக்கு வேணுங்கற சாப்பாட்டை அவ போடமாட்டா....''

''இங்கே சாப்பாட்டுக்கு என்ன மாமா பஞ்சம்.''

''அதுக்கு இல்லே, சமையற்காரங்களிடம் கொஞ்சம் சொல்லிவை, ஏதாவது பேசிடப்போறாங்க...''

''அதெல்லாம் நான் பார்த்துக்கறேன். என் மனசுக்குப் பிடிச்சு போச்சுன்னா இவன் இங்கேயே இருக்கலாம். மற்றபடி இவனால் வேறு பிரச்னை வராது என்று நீங்க சொல்றீங்க. அதுபோதும் எனக்கு''.

சுப்புடு கிளம்பியபோது அவர் கையில் சில நூறு ரூபாய் நோட்டுகளைத் திணித்தாள் சாருலதா.

''இதெல்லாம் எதுக்குச் சாரு''

''இருக்கட்டும் வச்சுக்கங்க. அடிக்கடி வந்துபோய்க் கொண்டிருங்க...''

''ஆகட்டும்மா''

அவர் புறப்பட்டார்.



வினோத்துடன் இருக்கும் ஒவ்வொரு நாளும் அவளுக்கு ஒவ்வொரு புது அனுபவமாக இருந்தது.

ஒருநாள் அவன் கையிலிருந்த மைனாக் குருவியை வாங்கி பரவசப்பட்டாள். ஒருநாள் அவன் மேல் ஓடிக்கொண்டிருந்த அணிலை அவள் மேல் விட்டபோது அவள் உடம்பு பூராவும் ஓடி பின்பு அவனிடம் தாவிப் போனது. ஒரு நாள், மரப்பொந்தில் இருந்த இரண்டு முயலைப் பிடித்து அதன் கழுத்தில் சிறு சலங்கையைக் கட்டிவிட்டான். அது குறுக்கு நெடுக்காக ஓடும்போது சதா ஓசை எழுப்பிக்கொண்டே இருந்தது.

அங்கே சமையலுக்கென்று மத்திம வயது பெண் ஒருத்தியிருந்தாள். மற்ற வீட்டு வேலைகளுக்கு ஆட்கள் இருந்தார்கள். சேலம், திருச்சி, பெங்களூர் என்று யாரேனும் உறவினர்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள். அவர்களுக்குச் சொந்தமாக மாடர்ன் பர்னிச்சர் மார்ட் சேலத்தில் இருந்தது. அழகாபுரம் பகுதியில் அதன் அலுவலகம், கிடங்கு எல்லோமே இருந்தது. இரும்பு மற்றும் மரம் போன்ற பொருட்களில் கட்டில் மேஜை நாற்காலிகள் செய்வதோடு புதுப்புது பர்னீச்சர்கள் உற்பத்தி செய்வதில் பிரபலமானவர்கள்.

பர்னீச்சர் மார்ட்டைக் கவனிக்கவும், உற்பத்தியாகும் இடத்தை நிர்வகிக்கவும் தனித்தனியே ஊழியர்கள் இருந்தார்கள். சமீபகாலமாக பிளாஸ்டிக் பொருட்களினால் ஆன நாற்காலி, ட்ரே போன்ற வியாபாரத்திலும் அவர்கள் ஈடுபட ஆரம்பித்து விட்டதால் வியாபாரப் பெருக்கம் கணிசமாகக் கூடிவிட்டது. ஒரு வாரம் பத்து நாட்களுக்கு ஒருமுறை சாருலதா நேரில் சேலம் சென்று பார்வையிட்டு விட்டுத் திரும்புவாள்.

மலேஷியாவிலிருந்து வரவழைக்கப்பட்ட மரத்தில் நூற்றுக்கு மேற்பட்ட கணிப்பொறி மேஜைகள் தயாரிக்கும் வேலையில் அவள் நிறுவனம் தீவிரமாக ஈடுபட்டிருந்தது. கம்ப்யூட்டர் வைப்பதெற்கென்றே பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்டு

செய்யப்படும் அதன் புதிய வடிவமைப்புப் பற்றிப் பிரபல நாளேட்டில் வாரம் ஒரு முறை விளம்பரம் வேறு வந்துகொண்டிருந்ததால் அந்த புதுமாதிரியான கம்ப்யூட்டர் 'டிஸ்க்' கிற்கு நாடெங்கிலுமிருந்து ஆர்டர்கள் வந்துகொண்டிருந்தன. முதலில் வந்த நூறு மேஜைகளுக்கான ஆர்டர்கள் பெற்று அதன் வேலைகளும் பூர்த்தியாகிவிட்டன. அவை, 'டெலிவரி' செய்வது சம்மந்தமாகச் சேலம் அலுவலகத்திற்கு டெலிபோன் செய்து பேசிக் கொண்டிருந்தாள். கண்ணாடி ஜன்னல் வழியே தோட்டப்பகுதியைப் பார்த்தாள்.

டெலிபோனில் பேச முடியாமல் கவனம் தாறுமாறாகச் சிதறியது. அந்த உணர்வே அவளுக்குள் கிளர்ச்சியை அதிகமாக்கியது.

மனசுக்குள் இதென்ன மாயம், இதற்கு என்ன அர்த்தம்.

கவனத்தை வேறுபக்கம் திருப்பிக்கொள்ள நினைத்தவளுக்கு அப்படிச் செய்யமுடியவில்லை. கண்கள், மறுபடியும் அங்கே போய் நின்றுவிட்டது.

தோட்டப் பகுதியில் வினோத் உடற்பயிற்சி செய்து கொண்டிருந்தான். குனிந்து நிமிரும்போது தசைப்பிடிப்புள்ள கையும், காலும், மார்பும் போர்வீரனைப் போல அவ்வளவு கச்சிதமாக இருந்தன. ரோமானிய வீரனைப் போல கைகளை வளைத்து நிமிர்த்தி உடற்பயிற்சி செய்யும்போது அவ்வளவு கவர்ச்சியாக இருந்தான்.

அவன் எப்பொழுதும் அணியும் பளபளப்பான சாட்டின் அரைநிக்கர், வெறும் உடம்பு. சிவந்த அந்த வெறும் உடம்பைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் போலிருந்தது அவளுக்கு. கைகளும் புஜங்களும்தான் எத்தனை அழகு.

டெலிபோனை அதன் இடத்தில் வைத்தாள். ஜன்னல் அருகில் பிரம்பு நாற்காலியை இழுத்துப்போட்டுக்கொண்டு அவன் உடற்பயிற்சி செய்வதை ரசிக்க ஆரம்பித்து விட்டாள்.

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வித அனுபவம்.

காலையில் சாப்பாடு மேஜை முன் வந்து உட்கார்ந்த சாருலதாவிற்கு அவனே டிபன் கொண்டு வந்து வைத்தான்.

பிற்பகல் தனக்கு வழங்கப்படும் உணவை, பறவைகளும் பட்ஷிகளும் வந்து உட்கார்ந்து சப்திக்கும் மரத்தடியில் உட்கார்ந்து அவைகளுக்கும் இறைத்துக்கொண்டே சாப்பிடுகிறான்.

காலையிலும் மாலையிலும் தோட்டப் பகுதியில் ஏதாவது வேலை செய்துகொண்டேயிருக்கிறான்.

சுப்புடு சொன்னது போல, எல்லா நேரத்திலும் சுறுசுறுப்பாகவே இருந்தான். கேட்ட கேள்விக்கு மட்டும் சில விநாடிகள் யோசித்தே பதில் சொல்கிறான். அப்படிப் பதில் சொல்ல ஆரம்பிக்கும்போது வார்த்தை வெளியே வருவதற்கும் ஒலி எழுப்புவதற்கும் நடுவே கொஞ்சம் அவகாசம் ஆகிறது. அந்த அவகாசத்தில் அவன் வாயிலிருந்து வார்த்தைகள் இல்லாத ஒருவித ஒலிமட்டும் வருகிறது. பேச ஆரம்பித்தபின் அந்த ஒலி இல்லை. இது ஒரு வகையில் திக்குவாயாக இருக்குமோ என்று ஆரம்பத்தில் நினைத்தாள். ஆனால் அது திக்கு வாயுடன் சேர்த்தியில்லை என்பதை தெரிந்துகொண்டாள்.



தோட்டப் பகுதியில் உள்ள கிணற்றடியில் மோட்டாரிலிருந்து கிணற்றுநீர் தொட்டியில் கொட்டிக் கொண்டிருக்க, சாருலதாவின் உடைகளை வினோத் வாஷிங் மிஷினில் போட்டு எடுத்து அலசி காயப் போட்டுக்கொண்டிருந்தான்.

சமையற்காரப் பெண்மணியை அழைத்தாள்.

"தங்கம்..."

"என்ன சாரு"

"மேரி வரலையா. துணிகளையெல்லாம் வினோத் தோச்சுகிட்டு இருக்கானே."

"மேரி ரெண்டு நாள் வரல. காலமே சொல்லி அனுப்பினேன்... அவங்க வீட்ல யாரோ 'மேரி இனிமே வேலைக்குவர மாட்டங்ன்னு' சொன்னாங்களாம்..."

"சொல்லிட்டு நிக்கலாமில்ல.."

வினோத்திடம் வந்தாள். "இதையெல்லாம் நீ தோய்க்க வேண்டாம். அதுக்கு நான் வேற ஏற்பாடு செய்துவிடுகிறேன்.

"இருக்கட்டும். நீங்க வேறு யாரையும் ஏற்பாடு செய்ய வேண்டாம். இது அப்படியொன்னும் எனக்குக் கஷ்டமா இல்லே. நானே செய்கிறேன்.

"கஷ்டத்துக்குச் சொல்லல; பொம்மனாட்டிகள் துணிகளைப் போய்..."

"அம்மா புடவையை அப்பாதான் தோய்ச்சு காயப்போடுவார். சில நாளைக்கு நானும் செய்வேன். அம்மா, அப்பா ரெண்டு பேருமே வயசானவா..."

"வயசானவங்களுக்கு செய்யறதிலே தப்பில்லை, புண்ணியம் உண்டு.."

"பிறருக்குச் சேவை செய்யறதே ஒரு புண்ணியம்தான்.."

அவளைப் பார்க்காமலே தன்வேலையில் ஈடுபட்டபடி இப்படியொரு வரிகளைச் சாதாரணமாகக் கூறினான்.



அவன் அங்கே வந்தபின் பங்களாவும், தோட்டமும் ரொம்பவும் துப்புரவாக இருந்தது. எல்லா இடத்திலும் ஒரு ஒழுங்கு தெரிந்தது. இலைச் சருகுகள் அவ்வப்பொழுது குவியல் குவியலாக எரியூட்டப்பட்டு மரத்தடி துல்லியமாகத் தெரிந்தது. குழாய் வழியே பாயும் நீர் தங்கு தடையின்றி வேர்ப் பகுதியை நனைத்தது. காய்ந்தும், வாடியும் போயிருந்த கடைமடை செடிகள் எல்லாம் பசுமை பெற்றுவிட்டன. சில செடிகள் பூக்கவும் ஆரம்பித்துவிட்டன. செடிகளுக்கும் குட்டையான மரங்களுக்கும் நடுவே இரும்புக் கம்பிகளில் இவ்வளவு நாள் எரியாமல் இருந்த மின்விளக்குகள்

இப்பொழுது எரிந்தன. இரவில் எந்த இடத்திலும் ஒரு சிறு திட்டு இருள்கூட இல்லை.

# 3

பத்து நாட்களுக்கு மேலாக சாருலதாவின் மனதில் உருத்தல். வினோத் வந்த தினத்தன்று மரப்பொந்திலிருந்து வெளியே எடுத்த நாகப்பாம்பை விடுவிக்கும்போது, நீ எங்கிருந்து வந்தாயோ அங்கே போ. மரப்பொந்திற்கு இல்லே. நீ எதுக்காக இங்கே வந்தேங்கறதபத்தி அப்புறமா பேசிக்கலாம் என்றானே அதன் அர்த்தமென்ன. இதைப் பற்றி அவனிடம் யாருமில்லாதபோது கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று நினைத்தாள்.

மாடி அறைக்கதவு திறந்திருந்தது. சாருலதா கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்து காலையில் கம்பெனி மானேஜர் கொடுத்துவிட்டுப் போன ஒரு மாதத்திற்கான வியாபார அறிக்கையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். முன் அறிவிப்பு ஏதுமின்றி ரொம்பவும் சுதந்திரமாக அறைக்குள் நுழைந்தவன் அங்கே மேஜைமேல் சுருட்டி வைக்கப்பட்டிருந்த அட்டையைப் பார்த்தான்.

''இதை நான் எடுத்துக்கலாமா''

''அந்த அட்டை உனக்கெதற்கு''

''எனக்கு வேணும்''

''சரி எடுத்துக்கோ. ஆமாம் அன்னிக்கு அந்தப் பாம்பிடம் ஏதோ பேசினியே ... நீ எதுக்காக இங்கே வந்தேங்கறத பத்தி அப்பறமா பேசிக்கலாம்னு சொன்னியே அதற்கு அர்த்தமென்ன!''

''அதை யாரோ இங்கே ஏவி விட்டிருக்கா''

''அப்படின்னா''

''யாரையோ கடிக்கச் சொல்லி அனுப்பியிருக்கா. அதுக்குள்ளே என் புலனில் பட்டுவிட்டது.''

சாருவின் உடம்பு வியர்த்து விட்டது. யாரையானும் கடிக்கச் சொல்லி நம்ம தோட்டத்துக்கு அனுப்புவானேன்.

''அது தீண்ட வேண்டியவங்க இங்கே யாரோ இருக்கணும்.''

''அதெப்படி உனக்குத் தெரிந்தது?''

''நான் அதைப் பொந்திலிருந்து எடுக்கும்போது அது ரொம்ப சீறினது, என்னிடம் வராம நழுவப் பார்த்தது.''

கையில் காகித அட்டையை எடுத்துக்கொண்டவன், கட்டிலில் சயனித்த வாக்கில் சாய்ந்திருக்கும் சாருலதாவையே சிலவிநாடிகள் பார்த்தான். முழங்கால் வரை புடவை விலகியிருந்தது. மார்புத் துணி கூடச் சற்றே விலகிப் போயிருந்தது. ஒன்றுமே பேசாமல் அவள் அருகில் வந்துநின்றவன் ஒரு மாதிரியாகச் சாந்த நிலையில் இருந்தவளுடைய இரண்டு தோள் பட்டையைப் பிடித்து நிமிர்த்தி அவளைச் சரியாக உட்கார வைக்க முயன்றபோது சாருலதா அவன் செய்கைகளைக் கண்டு அதிர்ச்சி அடைந்தாள்.

''வினோத் என்ன இது?''

அவள் எழுந்திருக்க முயன்றாள். ஆனால், அவளை அப்படிச் செய்யவிடாமல் அவளது இரண்டு புஜங்களிலும் கையை வைத்து அழுத்திவிட்டு, அவளிடமிருந்து நகர்ந்து நின்று அவளைப் பார்த்தான். விலகிய மார்புத்துணி, கெண்டைக்கால் வரை சரிந்த புடவை – ஆண்மையின் பலத்துடன் கூடிய அவன் ஸ்பரிசத்தினால் கலவர மடைந்தாள் அவள்.

''உன்னை யார் இங்கே வரச் சொன்னது... போ வெளியே''

அவன் கன்னத்தில் அரையப் போன நேரத்தில் அவன் பின்னால் திரும்பி நடக்க ஆரம்பித்துவிட்டான். இரண்டு நாளாக அவன் சாப்பிடவும் வரவில்லை. ஆனால் காலையில் பார்த்தால் அவன் குளித்ததற்கு அடையாளமாக அவனது ஈர உடைகள் கொடியில் கிடந்தன.



இரண்டு நாள் முன்பு அவனிடம் அத்தனை கடுமையாக நடந்து கொண்டிருக்க வேண்டாமோ, சாதாரணமாகச் சொல்லியிருந்தாலேகூடப் போயிருப்பானோ என்னவோ!

என்னமோ தெரியவில்லை. இரண்டு நாளாக அவனைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. மனம் மெதுவாகத் தன் வயம் இழப்பதாகத் தோன்றியது. காலையில் அவனுடன் சேர்ந்து தோட்டப்பகுதியைச் சுற்றுவது, குறுக்கு நெடுக்காக ஓடியிருக்கும் வேர்களை அவன் கரத்தைப் பிடித்து தாண்டுவது, தோட்டப்பகுதியில் வெறும் உடம்புடன் அவன் தேகப்பயிற்சி செய்வதைப் பார்க்காமல் இருப்பது... இவையெல்லாமே ஏதோ இழப்புபோலத் தோன்றியது...

இனிமேல் அவனிடம் இப்படிக் கடுமையாக நடந்து கொள்ளக்கூடாது. சமாதானம் சொல்லி அவனை அறையை விட்டு வெளியே வரும்படி சொல்லவேண்டும் என்ற முடிவுடன் அவன் அறைக்குப் புறப்பட்டபோது வினோத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அறைக்குள் நுழைந்தான். அவன் கையில் பெரிய அட்டைச் சுருள் இருந்தது.

''வா வினோத்''

அவன் கையிலிருந்த அட்டைச் சுருளை மௌனமாக அவளிடம் கொடுத்தான்.

''என்ன இது?''

''உங்க படம்''

அவன் கொடுத்த படத்தை அவள் பிரித்துப் பார்த்தாள்.

அவள் தோள்பட்டை குறுகுறுத்தது. இரண்டு, மூன்று நாட்களுக்கு முன் அவன் அவள் அறைக்குள் வந்து அவள் தோள் பட்டையில் கை வைத்து அழுத்தி உட்காரவைத்துப் பார்த்து விட்டுப் போனானே அது இதற்குத்தானா!





அவள் கண்களில் ஒரே பிரமிப்பு. அவள் கட்டிலில் சயனித்திருப்பதை அவன் பார்த்த பார்வையில் அப்படியே படம் வரைந்திருந்தான். கனுக்காலுக்கு மேல் நழுவியிருக்கும் புடவை மார்புப் பகுதியில் சரிந்திருக்கும் மேல் துணி ... அதோடு இன்னொரு படம்... அதைப் பார்த்தவுடன் அவளுக்கே வெட்கமாக இருந்தது. இரண்டாவது படத்தில் சாருலதா ஷவரில் குளித்துக் கொண்டிருந்தாள்.

அப்படியானால்...

வெட்கத்தால் அவள் முகம் சிவந்தது.

''அப்படியானால்... நான் கட்டிலில் சாய்ந்து படுத்திருப்பதைப் பார்த்தது போலவே ஷவரில் குளிச்சிகிட்டு இருந்ததையும் பார்த்தியா''.

ஓவியத்தின் லயிப்பிலிருந்து பார்வையை உயர்த்தி அவனைப் பார்த்தபோது அவன் வரும்போது கொண்டு வந்த பையைத் தோளில் மாட்டிக்கொண்டு வெளியேறிக் கொண்டிருந்தான்.

''வினோத், நில்லு. எங்கேபோற.''

''என்னைக் கண்டா இனிமே உங்களுக்குப் பிடிக்காம.போயிடும். நான் இங்கேயிருந்து போயிடறேன். நான் ஏதாவது தப்பு செஞ்சிருந்தா மன்னிச்சுருங்க...''

''நீ எந்தத் தப்பும் பண்ணலே. நீ தப்பு செஞ்சதா யார் சொன்னா ?''

''அன்னிக்குக் கோபமா வெளியே போன்னு சத்தம் போட்டீங்களே. நீங்க படுத்துண்டு இருக்கிற மாதிரி ஒரு படம் போடணும்னு ஆசை வந்தது. அதான் உள்ளே வந்தேன்'' ஒரு பள்ளிச் சிறுவன் உபாத்தியாயரிடம் முன் கைகளைக் கட்டிக்கொண்டு பேசுவது போலப் பேசினான்.

''நான் குளிக்கிற மாதிரியும் ஒரு படம் போட்டிருக்கே. அப்போ நான் குளிக்கிறபோதும் நீ பார்த்திருக்கே தானே. அது தப்பில்லையா.''

"நீங்க குளிக்கிறதை நான் பார்க்கல. கட்டில்ல படுத்துண்டு இருக்கறதை மட்டும்தான் அன்னிக்குப் பாத்தேன். அழகா இருக்கறவங்க எப்பப்ப அழகா இருப்பாகங்கறத புரிஞ்சுகிட்டுப் படம் போட்டாத்தான் நன்றாக இருக்கும்."

"அப்படின்னா நான் தூங்கறபோதும் குளிக்கறபோதும் தான் அழகா இருக்கேனா?"

"அது ஒரு நிலைதான். ஆனா உங்கள எப்படிப் பார்த்தாலும் அழகாத்தானிருக்கீங்க."

"நடு மெத்தையில் சாய்ந்து படுத்துக் கொண்டிருக்கிற மாதிரி இருக்கும் இதை "லாமினேட்" செஞ்சு மாட்டலாம். ஆனா ஈரப்புடவை உடம்புடன் ஒட்டியபடி உள் உடம்பெல்லாம் தெரிகிற மாதிரி போட்டிருக்கியே இதை நான் எப்படி வெளியே மாட்ட முடியும். அது போகட்டும். பதினாறாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்த ரூபன் என்கிற பிரான்ஸ் தேசத்து ஓவியனுடைய சாயல் உன் ஓவியத்தில் தெரிகிறது. இதற்கு முன் இப்படி ஏதாவது ஓவியங்கள் பார்த்திருக்கிறாயா?

"இல்லை" – என்று தலையைக் கவிழ்த்துக்கொண்டு கூறினான்.

தன் உயரத்திற்கு இளமைச் செழிப்புடன் நிற்கும் அவனை நிமிர்ந்து பார்த்தாள். ரூபன் என்கிற அந்தப் பிரெஞ்ச் ஓவியனின் படங்களின் பேரில் அவளுக்கு எப்பொழுதுமே ஓர் ஈடுபாடு உண்டு. ஹெர்மன் வெச்லர் எழுதிய 'ஓல்ட் மாஸ்டர்ஸ்' என்கிற புத்தகத்தில் அவனைப் பற்றி அவள் படித்திருக்கிறாள்.

தோளில் தொங்கும் பையுடன் புறப்படத் தயாராக நிற்கும் அவனைப் பார்த்தாள்.

"நீ எங்கேயும் போகவேண்டாம். நீ வரைந்த படங்கள் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது". என்று கூறிக்கொண்டே அவன் கையை இழுத்து முத்தமிட்டாள்.

''நான் இங்கேயே இருக்கலாமா. என்மேல் உங்களுக்குக் கோபமில்லையா?''

''கோபமில்லே, நீ இங்கேயேதான் இனி இருக்கப் போறே''

அப்படி அவள் சொன்ன அடுத்த நொடியே அவளை அப்படியே இறுக்கமாகக் கட்டிக் கொண்டுவிட்டாள்.

அவனுடைய ஆண்மை பொருந்திய ஸ்பரிசமும், அணைப்பும் அவளுடைய பெண்மையைச் சீண்டுவது போல இருந்தது. அடுத்தபடியாக அவன் தன்னை முத்தமிடப் போகிறான் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தாள்.

அவன் அப்படிச் செய்யவில்லை.

''உனக்கு இந்த இடம் பிடித்திருக்கிறதா'' ஆண்மை பொருந்திய அவன் அணைப்பிலிருந்தபடியே கேட்டாள். அவனாக விடுவித்தால் விலகலாம் என்ற தீர்மானத்துடன் வெறுமனே இருந்தாள்.

''பிடித்திருக்கிறது''

''என்ன?''

அவன் அணைப்பில் திடீரென்று அழுத்தம் தெரிந்தது.

''ரொம்ப'' என்றான்.

''எந்த வகையில்?''

அவனுக்குச் சொல்லத் தெரியவில்லை. அவன் உயரத்திற்குச் செழுமையாக வளர்ந்திருக்கும் ஒரு பெண்ணை இறுக்கமாகக் கட்டி அணைத்துக் கொண்டிருக்கும் போதுகூட அலைமோதும் பாலுணர்வின் அழுத்தத்தை வெளிப்படையாகச் சொல்லத் தெரியாமல் தடுமாறினான். இதைப் புரிந்து கொண்டாள் சாருலதா.

பௌருஷம் நிறைந்த இவன் உள் உணர்வுகளை மேம்படுத்த வேண்டும். அப்படி இவனைப் பெரிய மனிதனாக்கும் வரையில்

இவனுடைய அணைப்புகளுக்குப் பரிபூரணமான அர்த்தத்தை உண்டாக்கிக்கொள்வது வீண்.

சுப்புடு இவனை இங்கே விட்டுவிட்டுப் போகும்போது இருந்த மனோ நிலைக்கும் இன்று இருக்கிற மனோநிலைக்கும் உள்ள மாறுதல் அவளுக்கே வியப்பளித்தது. அன்று அவனை மனப்பூர்வமாக அங்கீகரித்துக் கொண்டாள் என்று சொல்ல முடியாது. ஆனால் இன்று அவள் வாழ்கிற "பயம் சூழ்ந்த வாழ்க்கையில் அவளுக்கு ஒரு நாள் போவது ஒரு யுகமாகவே இருந்தது. யாரை நம்புவது யாரை நம்பக் கூடாது என்றே தெரியவில்லை. ஏராளமான சொத்துக்களையும் பிரமாதமான முறையில் நடந்து கொண்டிருக்கும் வியாபார நிறுவனத்தையும் அவள் தலையில் சுமத்திவிட்டு விபத்தில் அவள் பெற்றோர் காலமானதிலிருந்தே அவளுக்குச் சோதனை காலம் ஆரம்பமாகிவிட்டது.

.. சாருலதா அப்படியொன்றும் மிகுந்த தைரியசாலியல்ல. தைரியசாலிபோல வெளியில் காட்டிக்கொள்ள வேண்டிய நிர்பந்தம். அப்படி நடித்துக் கொண்டிருக்கிறோம் என்பது அவளுக்கே தெரியும்.

காதலன் போல நடித்து ஒருவன் ஏராளமான பணத்தைச் சுருட்டிக்கொண்டு ஓடினான். நல்லவன் போல நடித்து வியாபார நுணுக்கங்களைத் தெரிந்து கொண்டு அவளுக்கு எதிராக போட்டி கம்பெனி ஆரம்பித்தான். அவளை டெலிபோனில் அடிக்கடி பிரபாகரன் மிரட்டுகிறான். இப்பொழுது பார்ப்பதற்கு இருபத்தைந்து வயது வாலிபனாகவும், மனோ நிலையில் அதிக வளர்ச்சி அடையாத நிலையில் இருக்கும் ஒரு கம்பீரமான வாலிபனைச் சுப்புடு அறிமுகப்படுத்தியிருக்கிறார். அவனால் அவளுக்கு நல்ல துணை கிடைக்கும் என்று அவர் சொல்லுகிறார்... இவன் எனக்கு எப்படி துணையாக இருக்க முடியும்?"

பார்க்கலாம். பத்து நாளில் இவனைப் புரிந்து கொள்ள முடியும் என்று சுப்புடு சொன்னார். பத்து நாளில் இவன் சாதுவானவன்தான் என்பது புரிந்துவிட்டது. கலாரசிகன் என்பது புரிந்து விட்டது. விஷப்

பாம்பு போன்ற விஷ ஜந்துகளிடம் பயமில்லாதவன் என்பது புரிந்துவிட்டது. நல்ல பலசாலியாக இருப்பான் என்பது புரிந்துவிட்டது. சோதனைகள் வரும்போது எப்படிச் செயல்படப் போகிறான் என்பது இனிமேல்தான் தெரிய வேண்டும். அதையும் தான் பொறுத்திருந்து பார்ப்போமே என்று தீர்மானித்துக் கொண்டாள்..



ஓவியத்தைக் கொடுத்துவிட்டு அவன் வெளியேறிக் கொண்டிருந்தபோது டெலிபோன் மணி ஒலித்தது. அதைச் சாருலதா எடுக்கப் போனபோது வேகமாகத் திரும்பி வந்த வினோத் டெலிபோன் ரிஸிவருடன் சேர்த்துச் சாருலதாவின் கையை அப்படியே அழுத்திப்பிடித்தான்.

''வினோத்...'' சாரு தடுமாறினாள். சாருலதா ரிஸிவரிலிருந்து தன்கையை எடுத்துக் கொண்டாள்.

வினோத் எடுத்தான்.

அவன் ஒன்றுமே பேசவில்லை. குரலைமட்டும் கேட்டான்.

அவன் முகம் மாறியது. மிக அமைதியாக டெலிபோனை அதன் இடத்தில் வைத்தான்.

ஏதும் பேசாமல் அறையை விட்டு மிக நிதானமாக வெளியே வந்தான்.

''வினோத், இப்போ டெலிபோனில் பேசினது யார்... நீ எங்கே போறே!''

அவன் அவள் கேள்விகளுக்குப் பதில் சொல்லவில்லை. அவன் போக்கில் ஒரு நிதானமும் முகத்தில் ஒருவிதக் கோபமும் இருந்தது.

# 4

நான்கு நண்பர்களுடன் உட்கார்ந்திருந்த பிரபாகர் ரொம்பவும் உற்சாகத்துடன் இருந்தான்.

''எப்பொழுதும் போல மிரண்டு போயிருக்கா. இதுக்கு முன்னே யெல்லாம் டெலிபோனில் திட்டுவா. இல்லேன்னா அழுவா. நான் உனக்கு என்ன துரோகம் செஞ்சேன், நீதானே என்னைக் காதலிக்கிற மாதிரி நடிச்சுட்டு என்னை ஏமாத்தி பதினைந்து லட்ச ரூபாயைப் பரிச்சுகிட்டுப் போனே. அது போறாதா.... ஆளவச்சு அடிப்பேன். உன்னைக் கொலை செஞ்சுடுவேன்னு மிரட்டறியே என்று புலம்புவாள்...

ஏன் போலீஸ்ல போய் சொல்றதுதானே. நான் தலைமறைவாகவா இருக்கேன். மூலக்கடையோரம் இருக்கிற அந்த வில்லை வீட்டில்தானே இருக்கேன். அடையாளம் வேணும்னாலும் சொல்றேன். வீட்டு வாசல்ல மின்சாரக்கம்பம் இருக்கும். அதிலே போஸ்ட் பாக்ஸ் கட்டியிருப்பாங்க என்று சொன்னால் உடனே அவள், 'உன்னை மாதிரி அயோக்கியன்களுக்கு உதவியாத்தானே போலீஸ் இருக்கு...., அப்படின்னு பேசுவா. இந்தத் தடவை எதுவுமே பேசல. டெலிபோன்ல பதிலே இல்லே. இன்னும் அரைமணி நேரத்திலே பணம் வரணும்; வரேலேன்னா நானே ரெண்டு பேரோட அங்கே வருவேன்னு சொன்னேன்... அப்படியே கிலி பிடிச்சுப்போய்ப் பேசவே முடியலேன்னு நினைக்கறேன். எப்படியும் இன்னும் கொஞ்ச நேரத்திலே பணம் வரும்...''

கதவைத் திறந்து கொண்டு வினோத் உள்ளே வந்து நின்றான்.

''கொஞ்ச நேரத்துக்கு முன்னால சாருலதாவோட பேசினது யாரு'' இப்படிக் கேட்டுக் கொண்டு வினோத் வந்து நின்றவுடன் முதுகுப் பக்கம் குரல் வந்தவுடன் பிரபாகர் திரும்பிப் பார்த்தான். எழுந்து நின்றவன் ஜீன்ஸை சரி செய்து கொண்டு அவனிடம் வந்தான்.

''எப்படியும் பணம் வரும் என்று நான் சொல்லல. இவனிடமே கொடுத்தனுப்பியிருப்பா போல இருக்கு'' என்று கேலியுடன் சிரித்தவன் ''என்னடா வெறுங்கையோட வந்து நிக்கிறே, அழைச்சுகிட்டு வரச் சொன்னாளா''

"நீ தானே பிரபாகர் ?"

"ஆமாம்."

ஆமாம் என்று அவன் சொல்லி வாய் மூடுவதற்குள் அவன்மேல் என்ன தாக்கியது, எது தாக்கியது என்று புரிந்துகொள்ள முடியாமல் அறையின் ஒரு மூலையில் போய் விழுந்தான் பிரபாகர்.

பிரபாகரின் மூன்று நண்பர்கள், திடீர் தாக்குதலால் அரண்டு போய் எதிர்தாக்குதலுக்கு ஆயத்தமான போது அறையில் ஒரு மூலையில் போய் விழுந்தான் பிரபாகர். நடப்பதற்குத் தடையாக இருந்த நாற்காலியைக் காலால் எட்டி உதைத்துவிட்டு எழுந்திருக்கும் போதே அவனைத் தூக்கி நிறுத்தி மறுபடியும் தாக்கியதில் அவன் வாசலில் போய் விழுந்தான்.

பிரபாகரின் நண்பர்கள் அவனைத் தாக்க முற்பட்டபோது முதலாமவன் வினோத்தின் முதல் தாக்குதலிலேயே ஒரு காலை ஒடித்துக்கொண்டு எழுந்திருக்க முடியாமல் படுத்துவிட்டான்.

இரண்டாமவனுக்கு வினோத் கையைத் திருகியதில் கைமுறுக்கிக் கொண்டு தூக்க முடியாமல் ஆகிவிட்டது.

பிரபாகரன் உட்பட மூன்று பேரின் பரிதாபகரமான நிலையைச் சிலநிமிஷங்களில் புரிந்து கொண்ட நான்காமவன் வினோத்தை நெருங்காமல் ஓரமாக ஒதுங்கி அடிப்பட்ட நண்பர்களுக்கு உதவப் போய்விட்டான்.

தோள்பட்டை எலும்பு பிசகி கையைத் தூக்க முடியாமல் எழுந்து நின்றான் பிரபாகர்.

"டேய் யார்டா நீ...

"சாருலதாகிட்டே டெலிபோனில் ஏதோ கேட்டியாமே, அதைக் கொடுத்துட்டுப் போகவந்தேன்..

"பணம் கேட்டா ஆள வச்சு அடிக்கிற அளவு அவளுக்குத் தைரியம் வந்துடுச்சா. அவளைச் சும்மாவிட மாட்டேன்...." அவன்

சொல்லி முடிக்கும் முன் அவன் முகத்தில் அங்கிருந்த மர ஸ்டூல் ஒன்று வந்து மோதி அவன் மூக்கை உடைத்தது...

எல்லாவற்றையும் பதட்டமின்றிச் செய்துவிட்டு வெளியே வந்தான் வினோத்.

# 5

டெலிபோனை எடுத்து யார் பேசுகிறார்கள் என்பதைக் கேட்டபின் ரிஸீவரைக் கீழே வைத்தவன், எவ்விதப் பதிலும் சொல்லாமல் வெளியே புறப்பட்டுவிட்டான். வினோத்தின் செய்கையால் கலவரமடைந்தாள் சாருலதா. இருப்பினும் அவன் எங்கே போகிறான் என்பதைக் கவனிக்கும்படி அங்கு வேலை செய்யும் பெண் ஒருத்தியை வினோத் பின்னால்போகும்படி அனுப்பியிருந்தாள். பிரபாகரையும் அவர் கூட்டாளிகளையும் தாக்கிவிட்டு அவன் வெளியே வருவதற்குள் அவனைப் பின் தொடர்ந்து வந்த பெண் ஓட்டமும் நடையுமா திரும்பி சென்று அங்கே நடந்தவற்றை ஒன்று விடாமல் சாருலதாவிடம் போய் கூறிவிட்டாள்.

''நம்ம வினோத் தம்பி அந்த ஆளுங்கள உண்டு இல்லேன்னு செஞ்சுட்டு அதோ வருது பாருங்க...''

சாருலதாவின் பங்களா காம்பௌண்ட்டுக்குள் நுழைந்தவன் மாடிக்குச் சென்றோ, கீழேயோ சாருலதாவைச் சந்தித்து அங்கே என்ன நடந்தது, அவன் என்ன செய்துவிட்டு வந்தான் என்பதைச் சொல்லவேயில்லை. ஒன்றுமே நடக்காதவன் போலப் பேரிக்காய் மரத்தில் தாழப் படர்ந்திருந்த கிளைகளைச் சரிசெய்து கொண்டிருந்தான்.

அவன் பின்னால் வந்து நின்றாள் சாரு.

''அவங்கள என்ன செஞ்சே?''

''ஆஸ்பத்திரிக்கு அனுப்பிச்சுட்டு வந்தேன்.''

''அவங்க பொல்லாதவங்க வினோத்.''

''அது உங்களுக்கு.என்னைப் பொறுத்தவரையிலே வெறும் தூசு''.

"உன்னை எங்கே கண்டாலும் விடமாட்டாங்க".

"நானும் இனிமே அப்படித்தான். இனிமே உங்க கிட்டே வாலாட்டினாங்கன்னா இப்போ மாதிரி ஆஸ்பத்திரிக்கு அனுப்ப மாட்டேன். ஓரேடியா அங்கேயே அனுப்பிடுவேன்... ஆனா நான் எதுவும் பண்ணமாட்டேன்...எப்படிப் பண்ணனுமோ அப்படிப் பண்ணுவேன்."

"வினோத்...." சாருலதாவின் குரலில் ஒரு நடுக்கம் தெரிந்தது.

"பயப்படாதீங்க... நான் உங்ககூட இருக்கற வரையிலே நீங்க இனிமே பயப்படவே கூடாது..."

அவள் கண்களில் திடீரென்று கண்ணீர் தளும்பிவிட்டது... இதுவரையில் இப்படிப்பட்ட வார்த்தையை யாருமே சொன்னதில்லை. விபத்தில் தாய் தந்தை இருவரையும் இழந்துவிட்டு நின்றபோதுகூட யார் யாரோ வந்து துக்கம் விசாரித்தார்கள். யார்யாரோ வந்து அணைத்துக் கொண்டார்கள். எல்லோம் கொஞ்ச நேரத்திற்குத்தான்.

அதன்பின்...

வியாபாரத்தைக் கவனித்துக்கொள்ள வந்த சித்தப்பாவும், சித்தியும்கூட வியாபாரத்தை மட்டும் பார்த்துக் கொண்டார்களேயன்றி அவளிடமுள்ள தனிமை பயத்திற்கு ஆறுதலாக ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை.

இப்பொழுது ...

நான் உங்க கூட இருக்கும் வரையில் எதுக்குமே பயப்படக்கூடாது என்கிறான்...

அவள் உண்மையிலேயே நெகிழ்ந்து போனாள்.



சொல்லிவிட்டுச் சென்றது போலவே சுப்புடு மறுபடியும் வந்தார்.

''என்ன சாரு பையன் தேறுவானா இல்லே.... சோப்ளாங்கிதானா. சீனிவாசநல்லூருக்கு டிக்கெட் வாங்கிட வேண்டியதுதானா'' என்று கேட்டபோது,

''இல்லே சுப்புடு ஸார். அவன் இங்கேயே இருக்கட்டும். நீங்க சொன்ன மாதிரியேதான் சொன்ன வேலையைச் செய்யறான். சொல்லாமலே பல வேலைகளைச் செய்கிறான். ஜாஸ்தி பேசறதில்லே. பார்வையும் சிரிப்பும்தான் பதிலா வருது. பழக்க வழக்கங்களில் கொஞ்சம் முதிர்ச்சியில்லாம இருப்பானோ என்று பயந்தேன். அப்படியும் இல்லை. காலை எத்தனை மணிக்கு எழுந்திருக்கிறான் என்றே தெரியவில்லை. உடற்பயிற்சி பண்றான். அவனுக்காக நான் கொடுத்திருக்கிற தோட்டத்து வீட்டில் யோகாசனம் செய்வான்போல இருக்கு. ஒரு நாள் வேலைக்காரி பார்த்து விட்டு 'அம்மா...அம்மா...ஓடி வாங்க அந்த பையன் தன்னோட அறையிலே தலைகீழா நிக்கிது...' என்று பயந்து கொண்டே சொன்னாள்... சரிசரி உன் வேலையைப் பாரு என்று சத்தம்போட்டு அனுப்பிட்டு நான் போய்ப் பார்த்தா பத்மா சனத்தில் உட்கார்ந்து பிராணாயாமம் செய்து கொண்டிருந்தான்.''

''நான் சொல்லல இவன் கொஞ்சம் வித்தியாசமானவன்... அப்போ இவனை உனக்குப் பிடித்துவிட்டது. இவனுடைய எதிர்காலம் உன்கையில்தான் இருக்கு. இவனைச் சிவமாக்குவாயோ, சவமாக்குவாயோ தெரியாது...''

''சிவமும் வேண்டாம், சவமும் வேண்டாம். முதலில் மனிதனாக்குகிறேன். பிறகு அவன் பாடு...''

''இவன் எதற்கும் உதவமாட்டானோ. விழலுக்குப் பாயற தண்ணீர் மாதிரி என்னோட முயற்சி விணாயிடுமோன்னு பயந்தேன்... என் முயற்சிக்கு அந்த நாமக்கல் ஆஞ்சனேயன் நல்ல பலனைத் தந்து விட்டான்'' என்று மகிழ்ச்சி தெரிவித்தார். அவர் புறப்படும் முன் ஸ்ரீனிவாசா நல்லூரில் இருக்கும் அவனுடைய பெற்றோர் விலாசத்தை ஞாபகமாக வாங்கி வைத்துக்கொண்டாள் அவள்.

"இவங்க குடும்பத்தோட எனக்கு ரொம்ப வருஷமாகப் பழக்கம். வெறும் நட்புதான். சொந்தமில்லை. இவனோட அப்பா ரொம்ப சனாதனி. சாது.. அம்மா அதுக்கு மேலே, முடிஞ்சா போய்ப் பாரு சிவராமன் வீடு எதுன்னு கேட்டா கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய்விடுவார்கள்...

"நிச்சயமாக நேரில் போய் வினோத்தின் பெற்றோரைச் சந்தித்து விட்டு வருவேன். உடனே என்னால் போக முடியாது. கம்பெனியில் நிறைய வேலையிருக்கிறது. கேரளாவுக்குப் போய் மரங்கள் வாங்க வேண்டும். என்னோட கேரள பிரிதிநிதி மரங்கள் வாங்கி நமக்குத் தேவையான அளவு சைஸ் செய்து அறுத்து வைத்திருக்கிறாராம். பணம் பட்டுவாடா செய்துவிட்டு அங்கிருந்து அதை ட்ரக்குகளில் ஏற்றி இங்கே அதைக் கொண்டு வரவேண்டும். இந்த வேலைகளை முடித்த கையுடன் நான் ஸ்ரீனிவாசநல்லூர் போய் வருவேன்."

சுப்புடு அவளிடமிருந்து விடை பெற்றார்.



முதுகுத் தண்டில் அடிப்பட்ட மாதிரி நிமிர முடியாமல் பிரபாகரனும் முழங்காலே திரும்பிவிட்ட மாதிரி ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாமல் அவனுடைய நண்பன் பிச்சையப்பனும், தோள்பட்டைக்குக் கீழே செயலிழந்து போன நிலையில் தாஜூத் என்ற மற்றொரு நண்பனும் மருந்துவமனைக் கட்டிலில் படுத்திருந்தார்கள். நான்கு நாளாக எவ்வளவு சிகிச்சை செய்தும் ஒன்றும் பயனளிக்கவில்லை. வினோத்திடம் அடிபடாமல் தப்பித்த ஜேம்ஸ் கவலையுடன் அவர்களுக்கு உதவிக் கொண்டிருந்தான்.

"ஆளவச்சா அடிக்கறா. அவளை ஒழிக்காம விடமாட்டேன்...." என்று பற்களைக் கடித்தான் பிரபாகர். அத்தனை அடிவாங்கியும் அவன் ஆத்திரம் தீரவில்லை. மேலும் யாரென்று தெரியாத மூன்றாம் மனிதனிடம் அடிவாங்கிய கோபம். சாருலதாவை ஏமாற்றி பயப்படுத்தி இத்தனை நாள் பணம் பறித்துக் கொண்டிருந்ததுபோல

இனிமேல் செய்யமுடியாமல் போய்விடுமோ என்ற ஏமாற்றத்தில் ஏற்பட்ட தோல்வி உணர்வு - படுக்கையில் படுத்திருக்கும்போதே நெளிந்தான்.

நண்பர்களுக்காக மருந்து வாங்க வெளியே வந்த ஜேம்ஸ் மருத்துவமனை வாசலில் வினோத் நிற்பதைப் பார்த்து பயந்துபோய் உள்ளே போக இருந்தான். அவன் கையைப் பிடித்து நிறுத்தினான் வினோத். அவனிடம் ஒன்றும் பேசாமல் அவன் கரத்தைப் பிடித்துக் கொண்டே மருத்துவமனைக்குள் பிரபாகரும் அவன் நண்பர்களும் படுத்திருக்கும் படுக்கை அருகில் வந்து நின்றான்.

அவன் பிரபாகர் அருகில் நின்றபோது அங்கே வந்த நர்ஸ், ''இந்த மூணு பேரையும் நீங்க வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போய் வைத்தியம் பண்ணுங்க. மேல் காயத்துக்கு மருந்து போட்டாச்சு. உள்பக்கமா நரம்பு பிசகிப் போயிருக்கு... யாராவது நல்ல சுளுக்கு எடுக்கறவங்க தெரிஞ்சா கூட்டியாந்து பார்க்க சொல்லுங்க'' ஜேம்சிடம் சொல்லிவிட்டுப் போனாள்.

இவைகளைக் கேட்டுக்கொண்டு நின்ற வினோத், பிரபாகர் அருகில் வந்து படுக்கையில் அவனை அப்படியே திருப்பிவிட்டு இடுப்புப் பகுதியில் இரண்டு விரலை வைத்து என்னமோ செய்தான். அடுத்த நொடியில் முதுகுத்தண்டுக்குக் கீழே நிமிர முடியாமல் மையம் கொண்டிருந்த வலி நீங்கி நிமிர்ந்து படுத்தான்... அவனைப் பழையபடியே படுக்க வைத்துவிட்டு, முழங்கால் செயலற்ற மாதிரி படுத்திருந்த பிச்சையப்பனிடம் வந்தான். செயலற்ற முழங்கால் முட்டிக்குப் பின்புறமாக விரலைக் கொண்டு போய் ஒரு சொடுக்கு எடுப்பது போல எடுத்தான். வளைந்து போய் செயலற்ற மாதிரி இருந்த அவனது முழங்கால் இப்பொழுது வலிகுறைந்துவிட்ட மாதிரி பழைய நிலைக்கு வந்துவிட்டது. தாவூத் அருகில் வந்து அவனது இடது தோள்பட்டையில் உள்பக்கம் சுருண்டிருந்த நரம்பை விரலை வைத்து நேர் செய்தபோது அவன் புஜங்களும் பழையபடி நல்ல நிலைக்கு வந்து விட்டன. அந்த மூன்று பேரையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு

யாரிடமும் ஏதும் பேசாமல் மருத்துவமனையை விட்டு வெளியே வந்தான் வினோத்.

அவனைத் தொடர்ந்து ஜேம்ஸ் ஓடி வந்தான். "ரொம்ப தாங்ஸ் வாத்யாரே டாக்டருங்களால முடியாததை நீ கண்மூடி கண்திறக்கற நேரத்திலே செஞ்சு முடிச்சிட்டே..."

வெளியே வந்து மௌனமாக நின்ற வினோத் கைகளை ஒன்றுக்குள் ஒன்று அடக்குவதுபோல வைத்துக்கொண்டான். கண்களை மூடி சில நொடிகள் தியானம் செய்வது போல நின்றான். ஜேம்ஸின் தோளில் சினேகத்துடன் தட்டிவிட்டு வேறு எதுவும் பேசமால்

*பேரென்ன முதுவரியில்*
*புட்டியின் மேல்*
*பேர் கொண்டவர்மமெல்லாம்*
*பேசக்கேளு*
*தூரென்ன சுனியாடி வர்மத்தின்....*

என்று ஜேம்ஸ் காதுபட கூறிக்கொண்டே போய் விட்டான்.

வினோத் என்ன சொன்னான் என்பதே அவனுக்குப் புரியவில்லை.

இரண்டு நாள் முன்பு வந்தான் அடி அடி என்று அடித்துத் துவைத்தான். இரண்டு விரல்களால் நரம்பு மண்டலத்துடன் விளையாடி எழுந்து நடமாட முடியாமல் செய்துவிட்டுப் போனவன், இன்று அவனாகவே வந்து ஏதோ செய்து படுத்த படுக்கையாகக் கிடந்தவர்களை எழுந்து உட்கார வைத்துவிட்டுப் போகிறான். போகும்போது ஏதோ சித்தர் பாடல் மாதிரி எதையோ சொல்லிக்கொண்டே போகிறான்.

ஜேம்ஸுக்குத் தலை சுற்றியது.



விேனாத்தை அழைத்துக்கொண்டு இரண்டு முறை சேலம் அலுவலகத்திற்குப் போனாள் சாருலதா. அங்கே வந்தால் அவளுக்கு முன்னால் காரைவிட்டு இறங்கி அவளுக்காகக் கதவைத் திறந்து வைக்கிறான். அலுவலகத்தில் அவளுக்காக இருக்கும் தனி அறைக்கதவைத் திறந்து மேஜையை ஒழுங்குபடுத்துகிறான். சுழலும் குஷன் நாற்காலியை துடைத்து வைக்கிறான். காரிலிருந்து பைல்களையும், புத்தகங்களையும் அவனே கொண்டு வந்து மேஜைமேல் வைக்கிறான். ஜன்னல் திரைச் சீலைகளை இழுத்துவிட்டுவிட்டு எங்காவது ஒரு மூலையில் அமர்ந்து விடுவான். இவைகளைச் சாருலதா கவனித்துக் கொண்டிருப்பாள்.

பரபரப்பே இல்லாத அவன் சுபாவம் அவளுக்குப் பிடிக்க ஆரம்பித்து விட்டது. அவனது எளிய சேவைகளை அவள் ரசித்து ஏற்றுக் கொள்ள ஆரம்பித்து விட்டாள். கம்பெனி ஊழியர்களில் யாரேனும் கொண்டு வரும் காபி, டீ ட்ரேயை அவனே வாங்கி கொண்டு வந்து, அவளிடம் நீட்டும் அந்தப் பணிவு அவளுக்குப் பிடிக்க ஆரம்பித்துவிட்டது. அடிக்கடி அவள் அவனை எதற்கோ பார்க்கும்போது அவனும் பார்ப்பான். அந்தப் பார்வையில் உள்ள வெகுளித்தனம் அவளுக்குப் பிடிக்க ஆரம்பித்து விட்டது.

இது மட்டும்தானா...

கொஞ்சம் கொஞ்சமாகக் கம்பீரமான அந்த உருவத்தில் அப்படியென்ன வசீகரம்! ஒவ்வொரு முறை அவனைப் பார்க்கும் போதும் புதுமனிதனைப் பார்ப்பது போலவே இருந்தது.

அவனுடைய உடை விஷயத்திலும் உணவு விஷயத்திலும் இப்பொழுது அவள் தனிக்கவனம் செலுத்தினாள்.

அவன் போக்கிலேயே அவனைப் போகவிட்டு அவன் பழக்கங்களுடன் தன்னையும் இணைத்துக் கொண்டாள். அவன் தோட்ட வேலை செய்யும்போது அவளும் அவனுடன் சேர்ந்து பாத்திகளுக்குத் தண்ணீர் திருப்பிவிட்டாள். அவன் பூச்செடிகளின் கிளைகளைக் கத்தரித்துப் போட்டவைகளை அள்ளிக் கொண்டு

போய்க் குப்பையில் போட்டாள். அவன் ஹோஸ் பைப்பில் செடிகளுக்கு நீர்விடும் போது இவள் வாளியில் நீர் கொண்டு தூரமாக உள்ள செடிகளுக்கு ஊற்றுவாள்.

சாருலதா பழகவும், நெருங்கவும் சுலபமானவள் என்கிற எண்ணம் அவன் மனதில் உண்டாக வேண்டும். இதுதான் அவள் குறிக்கோள்.



சிருஷ்டி என்பது அழகான விஷயம். ஒவ்வொரு சிருஷ்டியிலும் ஆண்டவன் கண்ணுக்குப் புலப்படாத அழகை வைத்திருக்கிறான்; உணர்வுகளை வைத்திருக்கிறான். சிருஷ்டியில் உபயோகமற்றது என்று ஒன்று இல்லவேயில்லை... வெறுக்கக் கூடியதும் ஒன்றுமில்லை. நாம் அன்பு செலுத்தினால் நாமும் அன்பைப் பெறமுடியும்.

வினோத் விஷயத்தில் இதுதான் நடந்தது. அவள் அவனிடம் அதிகமாக நெருங்கிப் போனபோது அவன் இன்னும் அதிகமாக அவளிடம் நெருங்கிவந்தான்.

# 6

முதல்நாள் இரவே அவள் ''அவனிடம் நாம் இருவரும் நாளைக்குச் சேலம் போகிறோம். அங்கே என் சினேகிதியின் கல்யாண நிச்சய தார்த்தம் சுந்தரம் திருமண மண்டபத்தில் நடக்கிறது. நாம் போகிறோம் தயாராக இரு.'' என்று சொல்லியிருந்தாள்.

காலை ஏழு மணிக்குக் கிளம்புவதற்குத் தயாராகிவிட்ட சாருலதா ரொம்பவும் எளிமையாக உடை உடுத்திக் கொண்டு வினோத் அறைப் பக்கம் வந்தாள்.

அவனே பெரிய அளவில் வரைந்த கரிய நிற சிவலிங்கத்தின் முன் குவித்த கரத்துடன் நின்று கொண்டிருந்தான்.

அவன் வெளியே புறப்படத் தயார் நிலையில் இருக்கிறான் என்பதை அவனது உடை புலப்படுத்தியது.

அளவெடுத்துத் தைத்த ஜிப்பாவும், பைஜாமாவும் - இந்த உடையில் மேலும் கம்பீரம் கூடியிருந்தது.

மங்கிய சிவப்பு வர்ண பின்னணியில் கரிய நிற சிவலிங்கத்தைப் பார்த்தபோது அவள் உடம்பு சிலிர்த்தது.

அவனுக்குப் பின்னால் வந்து நின்றவள் அவளும் சிவலிங்கத்தைப் பார்த்துக் கரம் குவித்தாள்.

''நாம் கிளம்பலாமா?''

வினோத் திரும்பிப் பார்த்தான்.

''டிபன் ரெடியா இருக்குச் சாப்பிட்டுவிட்டுக் கிளம்பலாம்'' என்றாள் அவள்.

''நான் இன்னிக்கு எதுவுமே சாப்பிடமாட்டேன்''

''ஏன்?''

இன்னிக்குப் பிரதோஷம். சிவனுக்குப் ப்ரிதியான நாள்''.

''எதற்குச் சிவனை நினைத்து விரதம்?''

''எனக்கு நல்ல புத்தி சுவாதினத்தையும் என்னைப்பற்றிக் கவலைப்படற அம்மா அப்பாவோட கவலையெல்லாம் போகனும்னு விரதமிருக்கிறேன். அதோட என்னோட மந்திரமே நமசிவாய தான்.''

''ஏன், நீ நன்றாகத்தானே இருக்கே''

''இல்லே, நீங்க நினைக்கற மாதிரி நான் இல்லே. என்கிட்டே ஏதோ ஒரு குறை இருக்கிறது தெரியறது. அது என்னவென்று தெரியவில்லை. சில நேரத்திலே சரியா இருக்கற மாதிரி தோணறது. சில சமயம் என்னன்னு சொல்லத் தெரியாம குழப்பமா இருக்கு.''

சரி உனக்காக இனிமே நானும் சிவனுக்கு விரதமிருக்கப் போறேன். வா டிபன் சாப்பிட்டுவிட்டு கிளம்பலாம்.



மிதசிதோஷ்ண நிலையில் ஏற்காடு ரம்மியமாக இருந்தது. காலையில் கடுங்குளிரும், வெய்யில் ஏற ஏற குளிர் தனிந்த மிதவெட்பமும்,.... மாலையில் மறுபடியும் குளிருமாக ஓர் உஷ்ணமானியில் சீதோஷ்ண நிலை ஏறி இறங்குவதுபோல இருந்தது.

வினோத்துடன் அந்தக் காலை நேரத்தில் மலை ரஸ்தாவில் பயணம் செய்வதில் இப்பொழுது ஒரு புதிய உற்சாகம் அவளுக்குள் கரை புரண்டது. இது ஏன்? எதனால்?.... காரில் வரும்போது முன் ஆசனத்தில் அவளுக்கு மிக அருகில் அவன் உட்கார்ந்திருந்தான். சிவந்த அவன் கரம் அவளுக்கு அருகில் ஆசனத்தில் படிந்திருந்தது. தற்செயலாகப் படுவதுபோல அவன் கரத்தின் மேல் தன்கையை வைத்தாள். அவன் வெறுமனே தான் இருந்தான். அவன் ஒன்றும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை என்பது தெரிந்தபோது அவன் கரத்தைத் தன் கரத்தினுள் சிக்க வைத்துக்கொண்டு அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவனும் அவள் செய்கையை ஏற்பது போல அவளைப் புன்னகையுடன் பார்த்தான்.

''இன்னும்கிட்டே வந்து உட்காரேன்.'' அவன் கரத்தை லேசாக வலித்து இழுத்தாள். அவள் அருகில் வந்தபோது அவனை மேலும் தன்னுடன் இழுத்துக் கொண்டாள்.

ஆண்மையுடன் கூடிய அவனது நெருக்கம் அவள் உடம்பில் புதிய அக்கினியை உண்டாக்கியது.



புதிய வாலிபனுடன் டி.ஆர்.எஸ். கல்யாண மண்டபத்தில் அவள் வந்து இறங்கும்போது அவளுடைய சினேகிதிகள் எல்லோரும் அவளைச் சூழ்ந்து கொண்டனர்.

''யார் சாரு இது, பாய் பிரண்டா, முறைப் பையனா.... ''

ஒருவர் மாற்றி ஒருவர் பகிரங்கமாகவும் காதோடு ரகசியமாகவும் கேட்டுக் கேலி செய்தனர்.

சினேகிதியின் விவாக நிச்சயதார்த்தம் முடிந்து ஒவ்வொருவராகக் கிளம்பிக் கொண்டிருந்தபோது, இப்பொழுது

விவாக நிச்சயம் செய்யப்பட்டிருக்கும் சிநேகிதியிடம் பேசத் தனியே சந்தர்ப்பம் கிடைத்தது. அவளும் டாக்டர், நிச்சயிக்கப்பட்டிருக்கும் மாப்பிள்ளையும் டாக்டர்.

வினோத்தின் அழகான உருவத்தைப் பார்த்துக் கண் சிமிட்டிக் கொண்டே தோழி சொன்னாள்,

''பார்ப்பதற்குக் கம்பீரமாக இருக்கிறார்; அழகாக இருக்கிறார். அவருக்கும் இன்னும் திருமணமாகவில்லை என்கிறாய், பிடித்திருந்தால் இவரையேகூடக் கல்யாணம் செய்து கொள்ளலாமே'' என்றாள் பாதி விளையாட்டும் பாதி உண்மையான தோழமையுடனும்.

மற்ற நேரங்களாக இருந்தால் வாய் மூடுமுன் வெறுப்பையும், எதிர்ப்பையும் காட்டும் சாரு, பதில் ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டு பிறகு நிதானமாக,

''என்னைவிடச் சுமார் ஐந்து வயது சின்னவன்.''

''இருக்கட்டுமே... மணவாழ்க்கைக்கு வயது ஒரு சம்பிரதாயமே தவிர சட்டமல்ல. கணவனைவிட மனைவி சின்னவளாக இருக்க வேண்டும் என்பது நியதிதானேயன்றித் தடை கிடையாது. வயது அதிகமான பெண்கள் மணந்த பல உலக மேதைகள் இருக்கிறார்கள்; இருந்தார்கள். ஷேக்ஸ்பியர், பால்சாக் இப்படி நிறைய பேர பத்தி அதிலே இருக்கு 'புக் ஆப் லிஸ்ட்' னு 'இர்விங்வாலஸ் எழுதிய புத்தகம்'. படிச்சி பாரு தெரியும்''

''அது போகட்டும். யாரிடமும் சொல்லாத யாருக்கும் தெரியாத என்னைப் பற்றியொரு ரகசியம் சொல்லட்டுமா...'' யாரிடமும் சொல்லக் கூடாது என்பது போல வலது கையை விரித்து நீட்டினாள் சிநேகிதி சொர்ணம். சொல்ல மாட்டேன் என்பது போல கைமேல் அடித்தபோது ''இப்பொழுது நான் திருமணம் செய்து கொள்ள நிச்சயிக்கப்பட்டிருப்பவர் என்னை விட மூன்று வயது சின்னவர் தெரியுமா. நாங்கள் ரெண்டு பேரும் விரும்பினோம். இதோ இன்று

நிச்சயதார்த்தம். அடுத்த மாதம் கல்யாணம். இது எங்க ரெண்டு பக்கத்து பெற்றோருக்கும் தெரியும்.... மனோதத்துவ ரீதியில் மனம் ஒப்புக் கொண்டுவிட்டால் எல்லாமே ஒப்புக் கொண்டுவிடும்.... எல்லாமே என்றால் என்ன அர்த்தம் தெரியுமா... சாருலதாவின் காதில் ரகசியமாக ஏதோ சொன்னாள்...."

"ச்சீ..... சுத்த மோசமானவடி நீ"

"மோசத்திலே சுத்த மோசம், அசுத்த மோசம். என்று ஒன்று உண்டா என்ன.. படுக்கை அறைக்குள் போய் விட்டால் எல்லாமே அழகான மோசம் தான்..."

அவள் டாக்டரானதால் மனோ ரீதியிலும், உடல் ரீதியிலும் இந்த வயது வித்தியாசம் எந்த விதத்திலும் தடையே இல்லை என்றும் மனத்திற்குப் பிடித்துவிட்டால் வினோத்தைக் கல்யாணம் செய்து கொள்வது பற்றி யோசி. யோசிக்க யோசிக்க அவரை உன் மனம் நூற்றுக்குநூறு ஏற்றுக் கொண்டு விடும். குழம்ப ஆரம்பித்தால் அந்தக் குழப்பம் வாழ்நாள் பூரா இருந்து கொண்டே இருக்கும். இதைத்தான் மனோதத்துவம் என்கிறோம்.

ஏற்கனவே பிரபாகரனை நம்பி ஏமாந்த மாதிரி ஆயிடாதே, பணம், மனம் எல்லாத்தையும் பறிகொடுத்துவிட்டுக் கல்யாண ஆசையேயில்லாம இருக்கே, பர்னீச்சர் மார்ட் வியாபாரத்திலே பழசையெல்லாம் மறந்து லயித்துப் போயிட்டே, அப்படியே இருக்கக் கூடாது. மனதில் ஏமாற்றங்களுக்கு அதிக இடம் தரக்கூடாது. அது நமது ஆரோக்கியத்தை எல்லா வகையிலும் கெடுத்து விடும். உன் மனசுக்குப் பிடித்துப் போய்விட்டால் வயசைப் பத்தி பார்க்காதே...."

அவர்கள் பேசிக்கொண்டே மண்டபத்தை விட்டு வெளியே வந்தனர். காரின் மேல் சாய்ந்து நின்று கொண்டிருந்த வினோத் அருகில் வந்ததாள் சொர்ணம்.

ஏற்கனவே இந்தியாவிலேயே மிக பரபரப்பாகச் செயல்பட்டு வந்த சினிமா படப்பிடிப்பு ஸ்தாபனமாக இருந்த மாடர்ன்

தியேட்டர்ஸின் ரிஹர்சல் ஹாலாக இருந்து இப்பொழுது கல்யாண மண்டபமாகப் புதுப் பொலிவுடன் இருக்கிறது. மரங்களில் கிளைகள் தெரியாமல் வண்ண விளக்குத் தோரணங்கள்.

அவர்கள் அருகில் வருவதைப் பார்த்து நிமிர்ந்து நின்றான் வினோத். இப்பொழுதுதான் அவனை டாக்டர் தோழி சொர்ணத்திற்கு அறிமுகப்படுத்தி வைத்தாள் சாருலதா.

''உங்களைச் சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி'' என்று சொர்ணம் கையை நீட்டியபோது... அதற்குத் தான் என்ன செய்வதென்று தெரியாமல் கையைப் பிசைந்தான். சாருலதா கண்ஜாடை காட்டியபோது ரொம்ப தயக்கத்துடன் கையை நீட்டினான். அவன் கையைப் பிடித்துக் குலுக்கினாள் சொர்ணம்.

அவளிடம் விடைபெற்றுத் திரும்பிக் கொண்டிருந்தாள் சொர்ணம். இம்மாதிரி இரவு நேரங்களில் அந்த மலைப் பாதையில் அவள் இதுவரை பயணம் செய்ததேயில்லை. இன்று வினோத்துடன் தனியே மலைப் பாதையில் வரும்போது மனம் என்றுமில்லாமல் பயமின்றி இருந்தது.

''டாக்டர் சொர்ணம் கை கொடுத்தபோது நீயேன் அவள் கையைப் பிடிக்க அப்படித் தயங்கினாய்?''

''எனக்குப் பிற பெண்களின் கையைப் பிடிக்கவே பிடிக்காது.''

''நான் பிடிக்கிறேனே.''

உங்களைத் தவிர வேறு யார் என்னைத் தொட்டாலும் எனக்குப் பிடிப்பதில்லை.

''உண்மையாகவா?''

''ஆமாம்.''

''ஏன் அப்படி?''

''என்னைத் தொட உங்களுக்கு மட்டுமே உரிமையுண்டு.''

''அதேபோல உங்களை நான் மட்டுமே தொடவேண்டும். நம்ப ரெண்டு பேருக்கு நடுவே வேறு யாருமே வரக்கூடாது.''

மிக அருகில் உட்கார்ந்திருந்த வினோத்தின் தோள் மேல் கையைப் போட்டு அணைத்து இழுத்துக் கொண்டாள்.



இரவுப் படுக்கையில் தூக்கமின்றி நெளிந்தாள். மனம் தெளிவற்ற நிலையில் அலை மோதியது. வந்த கொஞ்ச நாட்களிலேயே, வினோத் தன்னை இப்படிப் பயித்தியமாக்குவான் என்று அவள் எதிர் பார்க்கவில்லை.

நெற்றிக்கு நேரே வந்து நின்று, ''மன வாழ்க்கைக்கு வயது ஒரு சம்பிரதாயமே தவிர சட்டமல்ல. கணவனை விட மனைவி சின்னவளாக இருக்க வேண்டும் என்பது நியதிதானேயின்றித் தடை கிடையாது'' என்று கூறுகிறாள் சொர்ணம்.

''என்னைத் தொட உங்களுக்கு மட்டுமே உரிமையுண்டு அதேபோல உங்களை நான் மட்டுமே தொட வேண்டும்'' என்று வினோத் கூறுகிறான்....

நள்ளிரவுக்குத் தான் அவளால் தூங்க முடிந்தது.

அவன் அங்கே வந்து இரண்டு மாதங்களுக்குமேல் ஆகிவிட்டன.

அன்று காலையில் எழுந்ததுமே அவள் மனம் உற்சாகமாக இருந்தது. மாடியில் தன் அறையில் குளித்தாள். மாவிலையுடன் கூடிய மாங்காய் டிஸைன் போட்ட பேப்பர் சில்க் புடவையைக் கட்டிக் கொண்டாள். கேசத்தை அவிழ்த்துச் சரியாக வாரிக்கொண்டே மாடி வரந்தாவில் வந்து நின்றாள். தோட்டத்து மரத்தில் காய்த்துத் தொங்கும் கமலா ஆரஞ்சு பழங்களைப் பறித்துக் கொண்டிருந்த வினோத்தைப் பார்த்தாள்.

''வினோத் இன்னும் அரைமணி நேரத்தில் நாம் புறப்பட வேண்டும். தயாராக இரு....

அவன் பதில் ஏதும் கூறாமல் மாடி வராந்தாவைப் பார்த்தான்.

டிபன் சாப்பிடும்போது அவன் அருகில் நின்று கொண்டிருந்தான். அவன் கரத்தைப் பிடித்து இழுத்துத் தன் அருகிலேயே உட்கார வைத்து டிபன் சாப்பிட வைத்தாள்.

அரைமணி நேரத்திற்கெல்லாம் அவளுடைய அம்பாசிடர் பங்களா போர்ட்டிகோவிலிருந்து புறப்பட்டு விட்டது.

வினோத் அவளுடைய அறிவுரைபடி சில்க் கலந்த காட்டனில் கனகாம்பரக் கலரில் ஜிப்பாவும், பைஜாமாவும் அணிந்து கொண்டிருந்தான். அவனுக்காக அதை தைத்து அவனிடம் போட்டுக் கொள்ள சொன்னபோது, அதை அவன் மிக ஆவலாகப் போட்டுக் கொண்டவன் "இந்தக் கலர் எனக்கு ரொம்பப் பிடிக்கும். இந்த டிரஸ்கூட எனக்குப் பிடித்து விட்டது..." என்றபோது,

"அவ்வளவுதானே எவ்வளவு வேணுமோ அவ்வளவு வாங்கிக் கொள்..."

"நிஜமாவா ?"

"நான் சொல்வது எல்லாமே நிஜம்"

"நான் இப்போ இங்கே இருக்கேனே. இத்தனை சௌகரியங்களைச் செஞ்சு தர்றீங்களே. இது நிலைக்குமா இதுவும் நிஜந்தானா."

அவனது செழுமையான கன்னங்களை இரண்டு கைகளில் மிக சுதந்திரமாக வருடி "இனி நடக்கப் போவது நடந்து கொண்டிருப்பது எல்லாம் நிஜம்தான்" என்று சொன்னாள்.

அவளுடைய வழுவழுப்பான கரத்தை தன் கன்னத்துடன் சேர்த்து அவன் பிடித்தபோது அவள் உடம்பில் புதிய அக்கினி உண்டாகி ஆத்மாவுக்குள் புகுந்தது.

அருகில் அமர்ந்திருக்கும் அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

''இப்போ நாம் எங்கே போகிறோம் தெரியுமா?''

''எங்கே போகிறோம்.''

''ஸ்ரீனிவாச நல்லூரில் உள்ள உங்க வீட்டுக்கு.''

''நெஜமாவா''

''ஆமாம்''

''இப்போ அப்பா, அம்மா என்னைப் பார்த்தா ரொம்ப சந்தோஷப்படுவாங்க. அம்மா ரொம்ப பிரியமா இருப்பா. அம்மாவினால் எனக்குச் சரியா சாப்பாடு போட முடியேலங்கற காரணத்தினால் கொஞ்ச நாள் அக்கா வீட்டிலே இருந்தேன். அக்கா புருஷனுக்கும் அக்காவுக்கும் என்னைப் பிடிக்காம போயிடுத்து. கஷ்டம்ன்னு வந்தாலே விரோதமும் வந்திடும் போல இருக்கு.''

அவன் காரின் முன் சீட்டில் அமர்ந்து பேசிக்கொண்டு வந்தான்.

''இப்போ என்னோட அப்பா, அம்மாவ எதுக்குப் பாக்கப் போறோம். என்னை அங்கே கொண்டுபோய் விட்டுடப் போறீங்களா''

அவன் கேள்வியால் மனம் நெகிழ்ந்தது. அருகில் இருந்த அவன் கரத்தை அழுத்திப் பிடித்தாள்.

''உன்னை இனி யாரிடமும் அனுப்பப் போவதில்லை. என்னுடனேயேதான் இருக்கப் போகிறாய். நீ ஏற்காடு வந்து கிட்டதட்ட மூன்று மாதமாகப் போகிறது. உன்னை நான் வேலைக்கு வைத்துக் கொண்டதற்குச் சம்பளம் தரவேண்டாமா? அதை உன் அப்பா, அம்மாவிடம் கொடுத்துவிட்டு அவர்களையும் பார்த்துவிட்டு வரலாமே என்றுதான் இப்போ அங்கே போய்க் கொண்டிருக்கிறோம்.''

''எனக்குச் சம்பளமா ? நான் அங்கே அப்படியென்ன வேலை செய்தேன். வேளா வேளைக்குச் சாப்பிடறேன், தூங்கறேன். நினைச்சுகிட்டா படம் போடறேன். ஏதோ அப்பப்ப தோட்ட வேலை செய்யறேன். துணி தோய்க்கிறேன். இதெல்லாம் ஒரு வேலையா? அதுக்குப் போய் சம்பளமா?''

காலையில் காபியுடன் வந்து எழுப்பறே. பலநாள் என்னை உட்காரவைத்துச் சாதம் போடறே. தோட்டத்தைச் செப்பனிட்டுப் புதுசுபுதுசா பூச்செடிகள் எல்லாம் கொண்டு வந்து வைக்கறே. ரொம்ப நாளா என்னையும் மத்தவங்களையும் பயப்படுத்திகிட்டு இருந்த நாகப்பாம்பைச் சினேகமாக்கிக் கொண்டு என் பயத்தைப் போக்கினே. அதைவிடப் பிரபாகரையும் அவன் நண்பர்களையும் அடிச்சு ஆஸ்பத்திரியிலே போட்டே, என்னமோ தெரியலே, மறுபடியும் போய் அடிபட்டவங்களுக்குச் சுளுக்கு எடுக்கற மாதிரி எடுத்து விட்டு அவங்கள குணப்படுத்திட்டு வந்திருக்கே..."

"அது சுளுக்கு இல்லே, வர்மக் கலை."

"வர்மக்கலையா? அதுவேறு தெரியுமா உனக்கு" அவன் இதற்குப் பதில் சொல்லவில்லை.

"நாம காரில் போய் அங்கே இறங்கினா கிராமமே வேடிக்கை பார்க்கும்."

"பாக்கட்டுமே!"

சேலத்திலிருந்து புறப்பட்ட சாருலதாவின் கார் நாமக்கல் தாண்டி திருச்சி பாதையில் ஸ்ரீனிவாசநல்லூரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

# 7

சாலையின் இருபக்கமும் நிழல்தரும் மரங்கள். தொட்டியத்திலிருந்து கூடவே வந்து கொண்டிருக்கும் சிற்றோடை அதற்கப்பால் சாலையோர கிராமங்கள்.

பனை மரத்தை அப்படியே ரெண்டாகப் பிளந்து ஓடைக்கு குறுக்கே போடப்பட்டிருக்கும் பாலம். ஓடை நீரில் விளையாடும் கோவணம் அணிந்த அணியாத சிறார்கள். வைக்கோல் புரிகளால் மாடுகளைத் தேய்த்துக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீனிவாச நல்லூர் சாலையோரத்துக் கிராமம்; வினோத் வழிகாட்ட குறுகலான பாலத்தைக் கடந்து ஒரு ஓலைக் குடிசையின் வேலியோரமாக கார் நின்றது. முள்வேலிக்கு அப்பால் பூசப்படாத செங்கற்சுவர்

சாருலதாவும், வினோத்தும் கீழே இறங்கினார்கள். வினோத் கீற்றுப் படலைத் திறந்து கொண்டு உள்ளே ஓடினான்.

சுற்றிலும் காட்டுஆமணக்கு, ஆடாதொடை போன்ற செடிகள், மஞ்சள் நிறக் குடலைப் பூக்களுடன் ஏராளமான பூவரசு மரங்கள்.

கொண்டு வந்திருந்த பழக் கூடையுடன் குடிசை அருகில் போய் நின்றாள். வயதான பெண்மணியை இழுத்து வராத குறையாக அழைத்துக்கொண்டு வினோத் குடிசைக்குள்ளிலிருந்து வெளியே வந்தான். ஒல்லியான உருவம். தலைக்கேசத்தில் ஒன்றுகூட கருப்பில்லை. பாரம்பரியமான உடை.

''இது என்னோட அம்மா.''

''வாங்கோ.''

சாருலதா குடிசைக்குள் நுழைந்தாள். பழக்கூடையை வினோத்தின் தாயாரிடம் கொடுத்தாள். தோட்டத்தில் பழுத்த ஆரஞ்சு.

''சுப்பு, அப்பா சிவந்தலிங்கபுரம் போறதா சொல்லிண்டு இருந்தார். போய் பார்த்துட்டு வா, இப்பத்தான் கிளம்பிப் போனார்....''

அவன் போகாமல் நின்றான்.

''தெரியாத்தனமா சுப்புன்னு சொல்லிட்டேன், போய் அப்பாவை அழைச்சுண்டு வா... போ... பஸ் வந்துடப் போறது.''

சுப்புசாமி என்று கூப்பிட்டால் முறைத்துக் கொண்டு போய்விடுவான் என்று சுப்புடு சொன்னது நினைவுக்கு வந்தது சாருவுக்கு.

வினோத் அப்பாவை அழைத்துவர வேகமாக ஓடினான்.

அகலமான கூடம். எல்லா இடமும் மண்சுவர்தான். தரையும் அப்படியே. சுவர் பூராவும் அட்டையில் வரைந்து ஏதேதோ ஓவியங்கள். அதில் நிறைய சாமி படங்கள்.

''எல்லாம் இவன் போட்டதுதான்'' என்றாள் வினோத்தின் தாயார்.

இருவரும் தரையில் உட்கார்ந்தனர். ரெண்டு மாசத்துக்கு முன்னால சுப்புடு வந்து சொல்லிவிட்டுப் போனான். சுப்புசாமியை ஏற்காட்டிலே ஒரு எஸ்டேட்ல சேர்த்திருக்கேன், அவங்க அவனை நல்லா பார்த்துப்பாங்க. அவனைப் பற்றின கவலை இனிமே உங்களுக்கு வேண்டாம்னு சொல்லிட்டுப் போனான். கொஞ்ச நாள் அவ அக்கா வீட்ல இருந்தான். அங்கே அவனுக்கு வயத்துக்கு வேணுங்கறத போடாம துரத்திட்டா... அவனையும் இங்கேயும் கவனிக்க முடியல. அரைப் பயித்தியமா இருந்தா இங்கே எல்லாருமா சேர்ந்து முழுப் பயித்தியமாக்கிடுவாங்க. அதனாலதான் அவன் இங்கிருந்து எங்கேயாவது போயிட்டா நல்லதுன்னு நாங்க நினைச்சோம்.''

''அவன் நீங்க நினைக்கற மாதிரி பயித்தியமில்லேம்மா.''

''அவன் பயித்திய மில்லேம்மா அது எனக்கும் தெரியும். ஆனா வயசுக்குத் தகுந்த பழக்க வழக்கம் வேண்டாமா. கிட்டத்தட்ட மூணு மாசமா பழகறயே உனக்குத் தெரியல.''

''இப்போ கொஞ்சம் கொஞ்சமா மாறிக்கொண்டு வருகிறான். அவனை அப்படி மாற்றிக் கொண்டிருக்கிறேன். நிச்சயமாக மாறிவிடுவான்.''

''எவ்வளவு நல்லா படிச்சிண்டு இருந்தான் தெரியுமா? கிளாஸ்ல பஸ்டா வருவான்.''

வெளியே காலடியோசை கேட்டது. வினோத் முன்னே வர அவன் தந்தை சிவராமன் பின்னால் வந்தார். உயரமாக ஒல்லியாக



சிவந்த உடம்பு; தலையில் பிறைபோல வெண்கேசம். அது முடியும் இடத்தில் குடுமி. காதில் சிகப்புக் கல்லில் கடுக்கண். மேலே அங்கவஸ்திரம்.

''வாங்கோ''

சாருலதாவைப் பார்த்துக் கரம் குவித்தார். எழுந்து நின்ற சாருலதாவை உட்காரும்படி கூறிவிட்டுத் தானும் தரையில் உட்கார்ந்தார்.

''என்ன சாப்பிட்டீங்க, இப்போ என்ன சாப்பிடறீங்க. நாகம் இவங்க சாப்பிட ஏதாவது ஏற்பாடு செய்யேன்''.

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாங்க. நாங்க உடனே புறப்பட்டாகணும்''

வெந்தியத் தோசைக்கு மாவு அறைச்சு வச்சிருக்கேன். வீச நாழிலே தோசை வாத்துத்தரேன். நீங்க அவரோட பேசிண்டு இருங்கோ'' வினோத்தின் தாயார் உள்ளே எழுந்து சென்றாள். தாயாரின் தோளில் கைபோட்டு அணைத்தபடி வினோத்தும் உள்ளே போனான்.

''அம்மா மேலே அவனுக்கு அத்தனை வாஞ்சை. இப்பத்தான் பிரிஞ்சு இருக்க பழகிக் கொண்டிருக்கிறானோ. அல்லது உங்க கவனிப்பு அவனை அப்படி மாற்றியிருக்கிறதோ தெரியவில்லை. நடு ராத்ரிலே எழுந்து அம்மா அம்மா வென்று தேடுவான்.''

சிவராமன் பேசியபடி எழுந்தார். சாருலதாவும் எழுந்தாள்.

குடிசையை விட்டு வெளியே வந்தனர். முட் படலைத் தள்ளிக் கொண்டு வீட்டிற்கு எதிரே ஓடிக்கொண்டிருக்கும் அகலமான நீரோடைக் கரையிலே வந்து நின்றார்கள். ஓடையில் இடுப்பளவு தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது.

அவர்கள் பேசிக்கொண்டே நதிக்கரையில் நடந்தார்கள்.

ஹேமந்த ருது

நதியோரத்து மரங்கள் பூத்துக்குலுங்கின. ஆங்காங்கு மயிலிறகு போல சிரமஞ்சரிப் பூக்கள் பூத்திருந்தன. கரையில் நடக்கும் போது வெளிர் நீலத்தில் கரையில் படர்ந்திருக்கும் குதிரைக் குளம்புப் பூக்கள் பாதங்களை வருடின. மௌனமாக நடந்த சிவராமன்,

''வினோத்தைப் பற்றிச் சுப்புடு எல்லாவற்றையும் சொன்னானா?'' சிவராமன் கேட்டார்.

''ஏதோ தனக்குத் தெரிந்ததைச் சொன்னார்.''

என்னுடன் கூடப்பிறந்த அண்ணன்தான் சிதம்பரன்னு பேர். திருச்சிதான் சொந்த ஊர். சிவந்தலிங்கபுரம்னு இங்கிருந்து திருச்சி போற வழியிலே வரும். அதுதான் எங்க பூர்வீகம். சின்னவயசிலேயே என்னோட அண்ணன் ஒரு மந்திரவாதியிடம் சேர்ந்துட்டான். பிறகு அதுவே அவரோட தொழிலாப் போச்சு. ஊர் ஊரா போக வேண்டியது. வித்தை காட்ட வேண்டியது. பிதாம்பரவித்தையென்று அந்தக் காலத்தில் பிரிசித்தமான வித்தையொன்று உண்டு. எப்படியோ அண்ணா அதைக் கற்றுக்கொண்டு பிரபலமாயிட்டான். அதைக் கற்றுக் கொண்டு அந்த வித்தை செய்ய ஆரம்பித்த பின்புதான் கல்யாணம் செஞ்சுண்டான். வருமானமும் கூடுதலாச்சு. ஆனால் குழந்தையே பிறக்கல, கடைசி கடைசியா சுப்புசாமி - அதான் வினோத்தை அவன் பையன் மாதிரி வளர்க்க ஆரம்பிச்சுட்டான். அவன்தான் அவனைப் பள்ளிக்கூடத்திலே சேர்த்தான். படிப்பு வித்தை, படிப்பு வித்தை இப்படியே அவனைத் தன் விருப்பப்படி ஆளாக்கிக் கொண்டான். கல்லூரியிலும் படிக்க வைத்தான். அப்பொழுதும் அவனுக்கு வித்தை சொல்லிக் கொடுக்கறத நிறுத்தல. கிட்டத்தட்ட இவனைத் தன் உயரத்திற்குக் கொண்டு வந்து விடவேண்டும் என்பதுதான் அவனோட குறிக்கோள். இவனும் எல்லாத்தியும் கத்துகிட்டான். இவன் என் அண்ணனிடம் என்னென்ன கத்துக் கொண்டான் என்று எனக்கே கூடத் தெரியாது. நிறைய கத்துக் கொண்டான். பிதாம்பர வித்தைங்கறது யோக சாதனையோட தொடர்புடையது. கண்ணுக்கு முன்னாலேயே யானையை மறைய வைப்பாங்க, கண்ணுக்கு

முன்னாலேயே நெருப்பைப் கொண்டு வருவாங்க. அவருக்கு ஆண் வாரிசு இல்லங்கறதுனால என்னோட அனுமதியோடத்தான் இவனைத் தன்னோட சிஷ்யனா அழைத்துக்கொண்டு போனான். இவனுக்கும் சின்ன வயசிலிருந்தே படிப்பிலே நல்ல ஈடுபாடு உண்டு. வேதம் படிக்க வச்சு உபாத்தியாயத்திலே திருப்பிடலாம்னு நினைச்சேன்.

நாம முற்பிறவியிலே செய்யற எல்லாக் கர்மங்களும் கட்டையோட அழிகிறது என்று சொல்லுவார்கள். ஆனா அது அப்படியில்லை. பிராப்த கர்மங்கறது அழியறதில்லே, எத்தனை பிறவி எடுத்தாலும் போன ஜென்மத்து அழுக்கு ஒட்டிக் கொண்டுதான் வரும். அது மாதிரிதான் ஆகிவிட்டது.

அண்ணா நிஷ்டையில் உட்கார்ந்த நிலையிலேயே ஆறடி உயரத்தில் அந்தரத்தில் இருக்க, இவனோ தலைக்கு மேலே அனந்த சயனத்தில் படுத்திருப்பான். இவர்கள் வித்தையில் இதுதான் கடைசி ஐட்டம். இதைப் பார்க்கவே கூட்டம்வரும். அன்று அப்படித்தான் இவனை அந்தரத்தில் படுக்கவைத்துவிட்டு, இவன் தியான நிலைக்கு வருமுன் ஹார்ட் அட்டாக் வந்துவிட்டது. ஒரே சொடுக்குதான். அண்ணாவுக்கு நெஞ்சு வலி வந்து கீழே சாய்ந்ததை யாரும் கவனிக்கவில்லை. எல்லாமே ஏதோ வித்தையென்று வேடிக்கைப் பார்த்துகிட்டு இருந்துட்டாங்க. படுதா மூடியிருந்த கூடாரத்தைச் சிஷ்யர்கள் அப்புறப்படுத்தும் போதுதான் புரிந்துகொள்கிறார்கள். சிஷ்யர்கள் பார்க்கும்போது உயிர் போயிருந்தது. கொஞ்ச நாழிதான் அண்ணா உயிர் போய் கீழே கிடக்கிறான். அந்தரத்திலே இருந்த இவன் வெட்டின கிளை சாய்கிற மாதிரி கீழே விழுந்துடறான்''. சாருலதாவும் சிவராமனும் பேசிக்கொண்டே கரையோரமாக நடந்தார்கள்.

''கீழே விழுந்த இவனுக்கு மயக்கம் தெளியவே ரெண்டு நாளாயிடுத்து. அவ்வளவுதான். என்ன ஆச்சுன்னே தெரியலே. அதன்பின் இவனோட பழக்க வழக்கங்களே மாறிப்போச்சு. யார் கூடவும் பழகறதில்லே, பேசறதில்லே. பிரமை பிடிச்சவன் போல

இருந்தவன் மெதுவா பேச மட்டும் ஆரம்பித்தான். பி.காம் ரெண்டாவது வருஷம் காலேஜ் போறது நின்னு போச்சு. டாக்டர்களிடம் காட்டினா அவங்களாலும் ஒண்ணும் சரியா சொல்ல முடியல. என் சக்திக்குத் தகுந்தபடி டாக்டர்கள் ரெண்டு மூணு பேரிடம் காட்டினேன். காலப்போக்கிலே எல்லாம் சரியாப்போயிடும்னு சொன்னாங்க. சில நேரங்களில் தெளிவா இருக்கற மாதிரி இருப்பான். அந்த நேரத்திலே எது சொன்னாலும் செய்வான். பிறகு பழைய குருடி கதைதான்''.

நீண்ட தூரம் நதியோரத்தில் நடந்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

''நீங்க அவனைப் பற்றின கவலையை விடுங்க. நான் சரி செய்து விடுகிறேன். அவன் என்னிடமே இருக்கட்டும். அவனைப் பற்றினதொரு தீர்மானத்தில் நான் இருக்கிறேன். அவனை முற்றிலும் குணப்படுத்தி ஒரு நல்ல வாலிபனாக மாற்றும் முயற்சியில்தான் ஈடுபட்டிருக்கிறேன். அதனால் அவனை இனிமே அடிக்கடி இங்கே அழைத்துக்கொண்டு வருவது சாத்தியப்படாமல் போகலாம். அதற்கு உங்க அனுமதி வேணும். அதுக்காகத்தான் அவனை அழைத்துக் கொண்டு நானே நேரில் வந்தேன்!''

''தாராளமா அவன் உன்னிடமே இருக்கட்டும். உங்களைப்பற்றியும், உங்க குடும்பத்தைப் பற்றியும் சுப்புடு நிறைய சொன்னான். வினோத் மூலமா எங்களுக்கு உங்க சினேகம் கிடைச்சதை ஒரு பாக்கியமா நினைக்கிறோம். பிதாம்பர வித்தை செய்து கொண்டிருந்த என் அண்ணனிடம் என்னென்ன கத்துக்கொண்டான் என்றே எனக்குத் தெரியலே. நல்ல சிவபக்தனா இருக்கான். அற்புதமா ஸ்ரீருத்ரம் சொல்றான். திடீர் திடீர்னு ஆசனங்கள் செய்வான். படம் போடுவான்... பறவை, பிராணிகளிடம் ரொம்ப சினேகமா இருக்கான். பாம்பு, பறவை, கிளி, அணில் என்று எதாக இருந்தாலும் இவன் ஒரு குரல் கொடுத்தா அப்படியே மயங்கி நிற்கிறது. இது பதஞ்சலி யோகத்திலே இருக்கு. பறவை

பிராணிகளுடன் பேசக்கூடிய நாயன்மார் ஒருவர்கூட இருந்திருக்கிறார். அவர் பெயர் கழறிற்றறிவார். பறவைகள் பிராணிகளுடன் பேசுகிறவர்கள் பற்றி புராணங்களில் நிறைய நிகழ்ச்சிகள் உண்டு.

சர்வ பூதருதக் ஞானம் அதாவது பிராணிகளுடைய சப்தத்தைப் பற்றிய அறிவு பவதி உண்டாகிறது என்று பதஞ்சலி யோகத்தில் வருகிறது. சப்தம். அர்த்தம், ஞானம் இம் மூன்றும் நன்கு அறிந்தவனுக்கு பிராணிகள், பட்சிகள் என்ன பேசுகின்றன என்று தெரிந்துகொள்வது அப்படியொன்றும் கஷ்டமில்லை. இப்படிப் புராணங்களிலும், இதிகாசங்களிலும் நிறைய சம்பவங்கள் உண்டு. இதெல்லாத்தையும் விட இன்னொரு ஆச்சரியமான விஷயம். இவனுக்கு வர்மக் கலை தெரிஞ்சிருக்கு. இதையெல்லாம் அவன் எப்போ, எப்படிக் கற்றுக்கொண்டான் என்றே தெரியவில்லை. அவன் சிவ பக்தனா மாறினதுக்கே இந்த வர்மக்கலைதான் காரணம். வர்மத்தில் ஒரு ஆளைத் தாக்கினால் அந்த முடிச்சை இளக வைக்க இவனால் மட்டுமே முடியும். வேற யாராலும் செய்ய முடியாது. ஒருவரை ஹிம்சை படுத்தணும்னு இந்த வர்மக்கலையை உபயோகப் படுத்த மாட்டான். ஓர் எச்சரிக்கையாக இதைப் பயன்படுத்தி பின்பு அவனே போய் அடிபட்டவங்க எழுந்து நடமாடும்படியா சிகிச்சை செய்து விட்டும் வந்துவிடுவான்.

கோயில் உண்டியலை உடைத்துப் பணம் திருடிக் கொண்டுபோன திருடனை நான் நேரில் பார்த்துவிட்டு போலீஸ்லே சொல்லிட்டேன். அவன் தலைமறைவா இருந்தான். நான்தான் போலீஸ்லே சொன்னேன் என்கிற விவரம் அவனிடம் யாரோ சொல்லியிருக்கிறார்கள். தலைமறைவா இருந்தவன் ஒரு நாள் ஆற்றங்கரையோரமா நான் வரும்போது என்னை அடிச்சு மண்டையை ஓடச்சுட்டான். தண்ணியில்லாத ஆத்திலே தள்ளிட்டுப் போயிட்டான். இதையெல்லாம் சாதாரணமா வேடிக்கை பார்க்கிற மாதிரி இருந்த வினோத் ஒரு நாள் அவன் இருக்கற இடத்துக்கே

தேடிப்போய் அடிச்சுட்டு வந்தான். எழுந்து நடமாட முடியாம அவனுக்குக் கழுத்து லேசா திரும்பிவிட்டது. அதுக்குப் பின்னால் அவனால் போலீசுக்குப் பயந்து தலைமறைவாகி ஓட முடியவில்லை. போலீசார் கைது பண்ணின்டு போயிட்டா. அவங்க அவனை ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டு போய் சிகிச்சையெல்லாம் செஞ்சு பார்த்தா ஒண்ணுமே சரியாகலே. படுக்கையிலே ரொம்ப அவஸ்தை பட்டுண்டு இருக்கறதா போலீஸ்காரர் வந்து சொன்னார். யாரிடமும் எதுவும் கேட்காமல் இவன் நேரா ஆஸ்பத்திரிக்குப் போனான். வர்மத்தை இளக்கி அவனைச் சரிபண்ணி படுக்கையிலே எழுந்து உட்காருகிற மாதிரி செஞ்சுட்டு வந்துட்டான். இவன் ஆஸ்பத்திரி வராண்டாவிலே நடந்துவந்து கொண்டிருக்கும்போதே திருடன் ஓடிவந்து இவன் காலைப்பிடித்து மன்னிப்புக் கேட்டான்.

'அந்தத் திருடனை என்னடா செஞ்சே' என்று கேட்டேன்.

*கொல்லான் பொய் கூறான்*
*கனவிலான் என்குணன்*
*நல்லான் அடக்க முடையான்*
*நடுச் செய்ய*
*வல்லான் பகுத்துண்பான் மாசிலான்*
*கட்காமம்*
*இல்லான் இயமத்திடையின் நின்றானே*

என்று திருமூலரின் திரு மந்திரத்திலிருந்து ஒரு பாடலைக் கூறிக்கொண்டே போய் விட்டான்.

நடு இரவு எப்பொழுதும் அவன் தாயார் அருகில்தான் படுத்துக் கொண்டிருப்பான். நான் விழித்துக் கொண்டு பார்த்தால் இவன் படுத்திருந்த இடத்தில் இவன் இல்லை. அறை ஜன்னல் வழியே மங்கிய வெளிச்சம் மட்டும் தெரிந்தது. எழுந்து போய்ப் பார்த்தேன். கதவு உட்பக்கம் தாழிடப்பட்டிருந்தது. உள்ளே அவன் வழக்கமாக ஏற்றும் இலுப்ப எண்ணெய் அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஜன்னல்

வழியே உள்ளே பார்த்தேன். என் உடம்பு சிலிர்த்து விட்டது. பத்மாசானத்தில் அமர்ந்த நிலையில் தரையிலிருந்து இரண்டடி உயரத்தில் அந்தரத்தில் இவன் இருந்தான்.

அப்படியானால் இவன் அன்று கீழே விழுந்து மனம் ஸ்தம்பித்த நிலையில் இருந்தானே. அதெல்லாம் சரியாகிவிட்டது என்று அர்த்தமா?

எனக்குள் குழப்பம்தான் அதிகமானது.

இது மாதிரி நிறைய சொல்லலாம்.... வரவர அவனை இங்கே வச்சுக்கறத்துக்கே பயமா இருக்கு. தெருவிலே போனா பசங்க பயித்தியம் பயித்தியம்னு கத்தறாங்க. வீட்டுல வந்து உட்கார்ந்து அழறான்''.

''நீங்க அவனைப் பற்றி இனிக் கவலைப்படவேண்டாம் அவனிடம் நிறைய முகங்கள் இருக்கு. அது எந்தெந்த நேரத்திலே தெரியணுமோ அப்பப்ப தெரியுது. அவனிடம் வெவ்வேறு விதமான ஆற்றல் இருக்கு. அவை மறைந்து விடாம பாதுகாக்கணும். அதே நேரத்திலே அவனையும் சரி செய்யணும். நான் இதையொரு சவால் மாதிரி ஏத்துகிட்டு இருக்கேன்.

''என்னைப் பொருத்தவரையில் எனக்கு இருபத்தி ஐந்து வயது நிரம்பிய வினோத் என்கிற வாலிபன் வேண்டும். வாலிபனாக்க வேண்டும்... அவன் இல்லாமல் என்னால் இனி இருக்க முடியாது..''. இதைச் சொல்லும் போது அவள் உடம்புக்குள் ஒரு புதிய ஊற்றுச் சுரந்து கொண்டிருந்தது.

இருவரும் மறுபடியும் குடிசைக்குள் நுழைந்தார்கள்.

# 8

வினோத்தின் தாயார் கொடுத்த வெந்தியத் தோசையைச் சாப்பிட்டுவிட்டுக் குடிசையை விட்டு வெளியே வருமுன் சிவராமனிடம் ஒரு கவரை நீட்டினாள் சாருலதா.

''என்னம்மா இது.''

''இவனோட மூணுமாசச் சம்பளம்.''

''இவனுக்குச் சம்பளமா? இவன் அங்கே என்ன வேலை செய்தான். அங்கே அவன் என்னவேலை செஞ்சிருப்பான் என்று எனக்குத் தெரியும், படம் போட்டுண்டு இருந்திருப்பான். பறவை, அணில்களைப் பிடித்துத் தோளில் விட்டுக் கொண்டு தோட்டம் பூரா அலைஞ்சிகிட்டு இருந்திருப்பான்.''

''இல்லே, அதோடு சேர்த்து எல்லா வேலைகளையும் செய்யறான். துணி துவைக்கறான். பங்களாவைச் சுத்தமா வைத்துக் கொள்கிறான். எனக்குத் துணையா சேலத்தில் இருக்கும் என் ஆபீசுக்கு கூடவே வரான். என்னோட எதிரிகளை என்னைக் கேட்காமலே அடிச்சுப் போட்டுட்டு இப்போ நீங்க சொன்னீங்களே அதே மாதிரி எழுந்து நடமாடும்படியாக வர்மத் தாக்குதலிருந்து ''இளக்கி'' விட்டும் வரான்.

அவள் கொடுத்த கவரை வாங்கி கண்களில் ஒத்திக் கொண்டார்.

வாத்தியாரா இருந்து ரிடையர்ட் ஆனேன். அப்போதெல்லாம் வாத்தியார்களுக்குச் சம்பளம் ரொம்ப கம்மி. நான் ஒரு தமிழ் மாணவன். கூடவே உபன்யாசம் செய்ய ஆரம்பித்தேன். பிறகு அதன் பேரிலும் எனக்கு நம்பிக்கை போயிடுத்து. ரஸனையோட கேட்கறா. ஆனா எதையும் கடைபிடிக்கறதில்லே. நல்ல விஷயங்களைச் சுவாரஸ்யமா கேட்கறாங்க. அடுத்த நிமிஷமே அதற்கும் தனக்கும் சம்மந்த மில்லைங்கற மாதிரி ஆயிடறாங்க. வேதங்கள், உபநிஷதங்கள், தத்துவம், தர்மம் எல்லாம் நமது ஜனங்களுக்குப் பொழுதுபோக்கு அம்சமா மாறிப்போச்சு. அதில் கூறும் அறிவுரைக்கும் நமக்கும் சம்மந்தமில்லாத மாதிரி ஜனங்கள் தூரமா போயிட்டாங்க. இவங்களுக்கு எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் இப்படியே தன்போக்கில்தான் போவார்கள். இதைத்தான் அப்பொழுதே வேடிக்கையா, 'படிக்கிறது ராமாயணம் இடிக்கிறது

பெருமாகோயில்,' என்று சொன்னார்கள். ராமாயணமும், மகாபாரதமும் இதிகாசங்களும் வெறும் கதைதானா! அதிலிருந்து நாம் எவ்வளவு கத்துக்கலாம். எங்கே கற்றுக் கொண்டோம். அதனாலேயே எனக்கு, நான் செய்திண்டு இருந்த உபன்யாசங்கள் பேரில் நம்பிக்கையில்லாமல் போய்விட்டது... உபன்யாசம் செய்யறத நிறுத்தினவுடனே வருமானம் நின்னுபோச்சு...''

''கவலைப்படாதீர்கள். உங்களுக்கு நிரந்தர வருமானத்திற்கு நான் ஏற்பாடு செய்கிறேன்.''

தோளில் ஒரு அணில் விளையாடிக் கொண்டிருக்க வினோத் அங்கே வந்தான்.

''கிளம்பலாமா வினோத்.''

தாயார் வினோத்தைக் கட்டிக்கொண்டாள்.''

''நீ இனிமே சாருலதாவோட அங்கேயேதான் இருக்கணும்.

அவன் சரியென்பது போலத் தலையை ஆட்டினான்.

முகத்தில் தற்பெருமை தவழ பிறர் பார்க்கவேண்டும் என்பது போல சாருலதாவின் அருகில் முன் ஆசனத்தில் ஏறி அமர்ந்தான்.

கார் புறப்பட்டது.



மரங்கள் அடர்ந்த திருச்சி - சேலம் சாலையில் கார் திரும்பிப் போய்க் கொண்டிருந்தது.

''இப்போ எதுக்கு என் அப்பா, அம்மாவைப் பார்க்க வந்தீங்க.''

''நீ ரெண்டு மூணு மாசமா அங்கே வேலை செஞ்சிருக்கே, அதுக்குச் சம்பளம் தரவேண்டாமா. அதைக் கொடுத்துவிட்டு உன்னோட அப்பா அம்மாவைப் பார்க்கவேண்டும் என்ற விருப்பமும் தான் காரணம்.''

''நான் அங்கே என்ன வேலை செஞ்சேன். தண்டச்சோறு தின்னுட்டு வெட்டியா உங்க பங்களா தோட்டத்தைச் சுத்திகிட்டு இருந்தேன்.''

''இதோட வேற ஒரு காரணமும் உண்டு.''

''அதென்ன காரணம்.''

உன்னைப் பற்றி நன்றாகத் தெரிஞ்சுக்கணும்னு ஆசை ''தெரிஞ்சு கொண்டு என்ன செய்யப் போறீங்க?...''

ஒரு பாதுகாப்பு அரணை நிரந்தரமாகச் செய்து கொள்ளவேண்டும் என்று சொன்னால் இவனால் நான் என்ன சொல்ல வருகிறேன் என்பதைப் புரிந்து கொள்ள முடியுமா?

யோசித்தாள்.

பிறகு அவனுக்குப் புரிகிற மாதிரி சொன்னாள். ''உன் நன்மை, என் நன்மை எல்லாவற்றையும் உத்தேசித்துத்தான்''. என்றாள்.

''மனசிலே வேற ஏதோ இருக்குதானே. அதைச் சொல்ல முடியாம தயங்கறீங்க''

பொறியில் அடித்த மாதிரி அவன் இப்படிப் பேசியபோது வியப்புடன் அவனைப் பார்த்தாள் அவள்.

'ஆம்டா, இப்போ சொல்ல முடியாமத்தான் தடுமாறுகிறேன், தயங்குகிறேன். என் தயக்கமும், தடுமாற்றமும் மறைய வேண்டுமானால் நீ இருபத்தைந்து வயது வாலிபனாக முழுமையாக மாறவேண்டும். நீ என்னைத் தொடும் போது ஏற்படும் அந்த ஸ்பரிச உணர்வுக்கு ஓர் ஆண்மையில் முழுமையான அர்த்தம் வேண்டும்.... அதுவரை தடுமாற்றம் தான்.' என்று எண்ணிக் கொண்டவள்.

''நீ என்னோட முழுபாதுகாவலனாக வேண்டும். உன்னை நான் புரிந்துகொண்ட மாதிரி நீயும் என்னைப் புரிந்து கொள்ளவேண்டும். அதுவரை நான் காத்திருக்கப் போகிறேன்...''

கார் போகும் வேகத்தில் எதிர் காற்றில் காரோட்டி வரும் சாருலதாவின் கேசச் சுருள் அவன் முகத்தில் வந்து விழுந்தது. ரொம்ப

சுதந்திரமாக அதை அவன் அருகில் நகர்ந்து வந்து உட்கார்ந்து ஒதுக்கிவிட்டான். அப்படிச் செய்யும்போது அவளது கன்னங்களையும் வருடினான்.

அவள் அதற்கு எதிர்ப்பு தெரிவிக்கவில்லை.

அவள் எதிர்பார்ப்பும் அதுதான். அவனாகத் தன்னைத் தொட வேண்டும். அவனாகக் கட்டி அணைக்க வேண்டும். அவனாகக் கட்டி அணைத்து நெருக்க வேண்டும். முத்தமிட வேண்டும். உடம்பு பூராவும் வருட வேண்டும் என்று காத்திருக்கிறாள். அதுதான் அவனுடைய முழுமையான வளர்ச்சியின் அடையாளமாகும் என்றும் நினைத்தாள்; நினைக்கிறாள். அதுவரையில் அந்த ஸ்பரிச ஆலிங்கணத்திற்காகக் காத்திருக்கவும் தயாராக இருக்கிறாள்.

மனசுக்குள் ரகசியமாக ஒளிந்து கொண்டிருக்கும் இச்சைகள் பெண்களைப் பொறுத்தவரையில் அவ்வளவு சீக்கிரமாகத் தன் சொரூபத்தை வெளிக்காட்டிக் கொள்வதில்லை.

தாப உணர்வுகள் தோல்வியில் எங்கேனும் ஓரிடத்தில் முடங்கிப் போய் பின்பு நத்தை கூட்டுக்குள் தன்னை இழுத்துக் கொள்வதுபோல உள்ளுக்குள் போய் விடுகிறது. அது மீண்டும் வெளியே வர முயற்சிப்பதே இல்லையா என்ன? ஏன் இல்லை?

சரியான நேரத்தில் அது தன் இரண்டு அலகுகளையும் வெளியே நீட்டிக் கொண்டு வருவது போல மீண்டும் காதல் துளிர்விடும்போது வெளியே வருகிறது.

சாருலதாவின் மனமும் அப்படித்தானிருந்தது.

பிரபாகருடன் ஏற்பட்ட காதல் தோல்விக்குப்பின் அவளது ஆசைகள் முடங்கிப்போன ஆசையாகிவிட்டது. அதைக் காதல் என்பதைவிட மோசமான அனுபவம் என்றுதான் சொல்லவேண்டும். அதன்பின் அவள் காதல் நினைவுகள் நிரந்தரமாக மனக்கூட்டுக்குள் முடங்கிப் போய்விட்டது. அதனின்று அவள் வெளியே வர பிரயத்தனப்படவேயில்லை.

ஆனால் இதோ!... இவன் என்னைவிட ஐந்துவயது சின்னவன். இவனிடம் என்மனம் எப்படி லயிக்க ஆரம்பித்தது?...

எதிர்காற்றின் இதமான வருடலில் வினோத் கண்கள் லேசாக மூடி அவள் தோள்மேல் சாய்ந்தான்... இதற்காகத்தான் காத்திருந்தவள் போல அவனைத் தன்னுடன் நெருக்கமாக இழுத்து அணைத்துக் கொண்டாள். ஆண்மைப் பொலிவுடன் தன் உயரத்திற்குத் தன் அருகில் அமர்ந்து தன் மேல் சாய்ந்திருக்கிற அவனை அணைத்துக் கொண்டபோது...

அவள் உடம்பில் புதிய ஊற்றாகக் காதல் நீர்ச்சுனை சுரந்து உடம்பெல்லாம் ஓடியதை அவள் உணர்ந்தாள்.

இதென்ன உடம்பின் பௌதீக மாற்றம்? உடம்பும் உணர்வும் என்ன கேட்கிறது?.

இது என்னை எங்கே அழைத்துச் செல்லப் போகிறது.

பிரபாகரன் வருகைக்காகவும், அவன் சிரிப்புக்காகவும் ஏங்கிக் கொண்டிருந்து, பின்பு பெரிய மோசடி செய்துவிட்டு ஓடிப்போனானே. பிறகு எதிரியாக மாறினானே அப்படியொரு அனுபவம் நேர்ந்தபின் காதல் என்றாலே வெறுப்பாகிப் போனதே, அதேபோல இதுவும் ஆகிவிடாதே!

நிச்சயமாக அப்படி ஆகாது. இவன் ஒரு குழந்தை மாதிரி என்னால் பராமரிக்கப்படுகிறவன். என் அன்புக்காக ஏங்குகிறவன், என் முக அசைவுக்காக காத்திருப்பவன்.

'என்னைத் தொட உங்களுக்கு மட்டுமே உரிமையுண்டு. அதே போல உங்களை நான் மட்டுமே தொடவேண்டும். நம்ம ரெண்டுபேருக்கும் நடுவே வேறு யாருமே வரக்கூடாது' என்று சொன்னவன்.

இவன் என்னை ஏமாற்ற மாட்டான். மோசடி செய்யமாட்டான். பின்பு, பயப்படுத்தி பணம் பறிக்கமாட்டான்...

இவனை என்னைத் தவிர வேறு யாரும் தொடக்கூடாது. தொடவிட மாட்டேன்...

தன் மேல் படிந்திருந்த வினோத்தை மேலும் நெருக்கமாக அணைத்துகொண்டே நிதான வேகத்துடன் காரை ஓட்டினாள்.

பிற்பகலுக்குப் பின்பு புறப்பட்டவள் ஏழு மணி சுமாருக்குத் திரும்பிவிட்டாள்....

இரவு அவள் நினைவுகள் பிரபாகரனைப் பற்றியே இருந்தது...

எவ்வளவு மோசமானவன் அவன்.

# 9

கார் புரோக்கர் என்று சொல்லிக்கொண்டு வந்து அவளுக்கு அறிமுகமானவன் பிரபாகரன். ரியல் எஸ்டேட்டில் வெற்றிகரமாக ஈடுபட்டு ஏராளமாக லாபம் ஈட்டுவதாகக் கூறித் தினம் ஒரு மாடல் காரில் அவள் பங்களாவுக்கு வருவான். அப்பொழுது அவளிடம் பழையமாடல் அம்பாசிடரும், பிரிமியர் பத்மினியும் இருந்தது. அவற்றை எப்படியாவது விற்றுவிட்டுப் புதிய கார் வாங்கும் எண்ணத்தில் இருந்தாள். அவைகளை ''தள்ளிவிட'' அவளாக எடுத்துக்கொண்ட முயற்சிகள் பயனளிக்காத நேரம். இதை எப்படியோ தெரிந்துகொண்டு அவளிடம் வந்தான்.

அவளிடம் அறிமுகமான ஒரே வாரத்தில் அந்த இரண்டு கார்களையும் அவள் எதிர்பார்த்த விலைக்கு மேல் விற்றுக் கொடுத்துவிட்டு ''புரோக்கரேஜ் வேண்டாம்'' என்று கூறி அவளுடைய சினேகத்திற்கு அடிக்கல் போட்டுக் கொண்டுவிட்டான்.

அவன் பேச்சு, அவன் நடையுடை பாவனை, சிரித்துச் சிரித்து குழையும் குணம் இவைகளில் மனம் லயித்துப் போய்விட்டாள்.

பெரிய பணக்காரி, விபத்தில் பெற்றோரை இழந்தவள், மிகப் பெரிய பர்னீச்சர் மார்ட்டின் சொந்தக்காரி, யாருமில்லாதவள் என்கிற தகவல்களையெல்லாம் சேகரித்துக்கொண்டு ஒரு திட்டத்துடன்தான் அவன் தன்னுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டிருக்கிறான் என்கிற

உண்மை தெரியாமல் அவனுடைய வெளிப்பகட்டில் மனதைப் பறிகொடுத்து விட்டாள். ஏற்காடு மலையில் எழில் சூழ்ந்த இடங்களில் அவர்களுடைய காதல் வளர்ந்தது.

தன் ரியல் எஸ்டேட் பிசினசில் பலருக்குப் பல விதங்களில் உதவி இருப்பதாகக் கூறினான்.

சாருலதா சாதாரணமாகத் தன் மன இயல்புகளை எதற்கும் உருகும் நிலையில் வைத்துக் கொண்டிருப்பவள். பயந்த சுபாவம் உள்ளவள் என்பதையெல்லாம் தெரிந்து கொண்டான். காதல் வலையில் சிக்கி அவளை உருகும் நிலைக்கும் கொண்டுவந்தான்.

பெரிய தோட்டப் பகுதியுடன் நல்ல நிலையில் இருக்கும் பங்களாவொன்று ரொம்பவும் மலிவான விலைக்கு வருவதாகக் கூறி அவளை அழைத்துக் கொண்டு போய் காட்டினான்.

சேலம் அழகாபுரம் பகுதியில் மலைச்சரிவு ஓரமாக உள்ள அதைப் பார்த்தவுடனேயே அவளுக்குப் பிடித்துப் போய்விட்டது. ஆறு மாதங்களாகப் பூட்டப்பட்டிருக்கும் அதன் சொந்தக்காரர் டெல்லியில் இருப்பதாகவும் அதன் பத்திரங்கள் பிற தஸ்தாவேஜுகளைத் தன்னிடம் கொடுத்து விட்டுப் போயிருப்பதாகவும் அவளிடம் கூறி அவைகளைக் காட்டினான்.

அழகாபுரத்தில் உள்ளே தள்ளி சின்ன புதூர், பெரிய புதூர் இணையும் பகுதி, வேகமாக அபிவிருத்தி அடைந்து வரும் புறநகர் பகுதி, பங்களாவும் தூரத்தில் மலைக்குன்று, ஆங்காங்கு முளைக்கும் சின்னதும், பெரியதுமாக வீடுகள்.

ஒரு பெருந்தொகை கொடுத்து அதை வாங்க ஏற்பாடு செய்து விட்டு, எல்லா ஏற்பாடுகளுடனும் வந்தவன் மீதித் தொகையை மூன்று மாதத்தில் தருவதாக ஒப்பந்தமொன்றைப் போட்டுக் கொண்டு போனவன், பிறகு அவன் வரவேயில்லை. ஒரு நாள் எங்கிருந்தோ டெலிபோன் செய்தான். எல்லா வேலைகளும் முடிந்து விட்டதாகவும், மீதித் தொகையைக் கொடுத்துப் பத்திரத்தை வாங்கிக் கொள்ளலாம்

என்றும் பதிவு வேலைகளுக்காக அலைந்து கொண்டிருப்பதாகவும் கூறியவன் அதன்பின்பும் நேரில் வரவில்லை. லட்சக்கணக்கில் பணத்தைக் கொடுத்து விட்டுப் பிரபாகரனுக்காக காத்திருந்தாள்.

அவன் பழக்க வழக்கங்கள், பேச்சு, அவளிடம் குழைந்து குழைந்து பேசிய பேச்சில் மயங்கிப் போனவள், அவள் மனதைப் பறிகொடுத்தவளுக்குப் பத்து லட்சத்திற்கு மேல் நம்பிக் கொடுத்த பணம் அப்படியொன்றும் பெரிய விஷயமாகப்படவில்லை.

பிறகுதான் பூதம் புறப்பட்ட கதையாக ஒவ்வொன்றாகக் கிளம்ப ஆரம்பித்தது.

அந்தப் பங்களாவின் உண்மையான வாரிசுதாரர் வேறு ஒரு பெண் என்பதும் அவள் டெல்லியில் நிரந்தரமாகக் குடியேறி விட்டதாகவும், ரொம்ப வருஷமாக அதை விற்க முயன்று கொண்டிருப்பதாகவும் இப்படி ஒவ்வொரு தகவலாக வர ஆரம்பித்தபோது சாருலதா அதிர்ச்சி அடைந்தாள்.

பெருந்தொகை முன் பணமாகக் கொடுத்து சாருலதா வாங்க விருந்த மலையடிவார பங்களாவில் எதோ மராமத்து வேலை நடப்பதைப் பார்த்துவிட்டு அவளுக்கு டெலிபோன் செய்தார். சேலத்தில் அவள்து நிறுவனத்தின் மானேஜர் மணி.

பதறிப்போன சாருலதா காரை எடுத்துக் கொண்டு பிரபாகரைத் தேடிப்போனாள்.

தெரியாத்தனமா அந்த அயோக்கியனுக்கு இங்கே வீட்டை வாடகைக்குக் கொடுத்துவிட்டு இப்போ அவஸ்தைப் படறோம். தினம் ரெண்டு பேர் தேடிகிட்டு வராங்க. நேற்று ஒருத்தர் போலீஸோட வந்தார்.. அவன் இங்கே வந்து ரெண்டு மாசமாகப்போவுது. நீங்களே அவன் குடியிருந்த போர்ஷனைப் போய்ப் பார்த்துக்குங்க என்று கையெடுத்துக் கும்பிட்டார்.

நேராக பிரபாகர் வாங்கிக் கொடுப்பதாகச் சொன்ன அழகாபுரம் பங்களாவுக்குச் சென்றாள். காம்பௌண்டைச் சுற்றி புதர்போல்

வளர்ந்திருக்கும் செடி கொடிகளைச் சிலர் வெட்டி ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்க மா, வேம்பு, வாத நாராயண மரங்களின் கிளைகளைச் சிலர் வெட்டிக் கொண்டிருந்தார்கள். மாட்டு வண்டிகள் மணலையும், செங்கற்களையும் சரித்துவிட்டு வெளியேறிக் கொண்டிருந்தன.

பதட்டத்துடன் காரில் உள்ளே போக முயன்றபோது வாட்ச்மேன் அவள் காரைத் தடுத்து நிறுத்தி விட்டான். வாட்ச்மேனுடன் அவள் தர்க்கம்செய்து கொண்டிருக்கும் போதே மற்றொருகார் வந்தது. வாட்ச்மேன் காரில் இருந்த நடுவயது பெண்ணுக்கு மரியாதையுடன் பங்களா கேட்டைத் திறந்து விட்டான். அந்தக் கார் உள்ளே போய்விட்டது.

''காரிலே போறாங்களே அவங்க யாரு?''

''இந்தப் பங்களா சொந்தக்காரங்க. டெல்லியிலேயிருந்து வந்திருக்காங்க சாரதம்மான்னு பேரு.''

''அவங்ககூட நான் பேசணுமே''

''தாராளமா பேசுங்க. காரை ஓரமா நிறுத்திட்டுப் போங்க.''

காரை ஓரமாக எடுத்து நிறுத்திவிட்டு உள்ளே போனாள்.

ஏராளமாக முன்பணம் கொடுத்துப் பங்களாவை வாங்கியிருக்கிறோம். பத்திரப்பதிவு அன்று மீதித் தொகையைக் கொடுக்கப் போகிறோம். அதற்குள் இவள் யார்? இவள்தான் பங்களா சொந்தக்காரியாமே ஒருவேளை இவளிடம் தான் மீதித் தொகையைக் கொடுத்து கிரயம் செய்துகொள்ள வேண்டியிருக்குமோ! அப்படியென்றால் இந்த மராமத்து வேலைகளை யார் செய்யச் சொன்னது.

சாருலதா உள்ளே நுழைந்தாள். வேலையாட்களுக்குக் கட்டளை பிறப்பித்துக் கொண்டிருந்த அந்த நடு வயது பெண்ணிடம் வந்து நின்றாள். நாற்பத்தைந்து வயதிருக்கும். கண்ணைப்பறிக்கும் வெளிர்சிகப்பில் அப்படியொரு நிறம். பாப் செய்யப்பட்ட கேசம். முலாம் பூசப்பட்ட தங்கத்திலே கண்ணாடி.

''நமஸ்காரம்''

சாரதாம்மாள் திரும்பிப்பார்த்துப் பதிலுக்கு ''நமஸ்காரம்'' என்றாள்.

''என் பெயர் சாருலதா. மார்டன் பர்னீச்சர் மார்டின் ஓனர்.''

''வாங்க உட்காருங்க... அங்கிருந்த மர நிழலில் இரண்டு நாற்காலிகளில் இருவரும் உட்கார்ந்தனர். எப்படி விஷயத்தை ஆரம்பிப்பது என்று குழம்பிப் போயிருந்த நிலையில் ,

''இந்த பங்களாவை...'' என்று அவள் ஆரம்பித்தவுடன்,

''ஆமாம் இதைக் கொஞ்சம் பழுதுபார்த்து அப்படியே காஞ்சி காமகோடி மடத்துக்குக் கொடுத்துடப்போறேன். அதான் வேலை நடந்து கொண்டிருக்கிறது'' என்றாள் சாரதாம்மாள்.

''இந்தப் பங்களாவோட வாரிசுகள் ரெண்டு பேர்; அவங்க ரெண்டு பேரும் வெளிநாட்டிலேயே தங்கிட்டாங்க; இனிமே இங்கே வர உத்தேசமேயில்லை. ஆனால் இதை விற்க எனக்குப் பவர் ஆப் அட்டர்னி கொடுத்துட்டாங்க. என்று சொல்லி....பிரபாகர் என்பவர் முன் பணமெல்லாம் வாங்கிக் கொண்டு போனாரே.''

''ஆமாம் இப்படி ஒரு பொய் சொல்லி ஏமாந்தவன் தலையிலே கட்ட ஒரு அயோக்யன் அலைஞ்சுகிட்டு இருக்கான். நீங்க வந்து இதை உடனே தடுத்து நிறுத்தியாருக்காவது வித்துட்டுப் போங்க இல்லேன்னா பெரிய சிக்கலாயிடும் என்று என் நண்பர் ஒருவர் எனக்குத் தகவல் சொன்னார். அவர் சொல்லி ஆறு மாசமிருக்கும். இப்பத்தான் நேரம் கிடைத்தது. பத்து நாள் முன்பு தான் டெல்லியிலிருந்து வந்தேன்.''

''அப்படின்னா''

''அந்த ஆளு... அவன் பேர் கூட பிரபாகர் என்று சொன்னதா ஞாபகம். அவன் சொன்னது, சொல்லிகிட்டு இருக்கறது எல்லாம் சுத்த பொய். இது என்னோட தாத்தா நாரயண ஐயங்காரோட பழைய

நாளைய பங்களா. அவர் பெரிய பார் அட் லா. அவர் தன் பிராக்டீஸை டெல்லிக்கு மாற்றிக்கொண்டுவிட்டார். எங்க குடும்பமே அங்கே போய் முப்பது வருஷத்திற்கு மேலே ஆகப் போகிறது. என்னோட பசங்க எல்லாம் வெளிநாட்டிலே நிரந்தரமா தங்கிட்டாங்க. நாங்க இனிமே இங்கு வர சந்தர்ப்பமே இல்லே. அதான் இதைக் கொஞ்சம் ரிபேர் செஞ்சு மடத்திடம் ஒப்படைக்க வந்திருக்கேன். எங்க குடும்ப நண்பர் லாயர் ஷண்முகமூர்த்தியிடம் சொல்லி டாக்குமெண்ட்ஸ் எல்லாம் தயார் செய்தாச்சு....''

சாருலதா பிரமை பிடித்தவ போல உட்கார்ந்திருந்தாள். பிரபாகரன் இவ்வளவு பெரிய மோசடிக்காரனாக இருப்பான் என்று அவள் நினைக்கவேயில்லை.

அப்படியானால்...

காதலிப்பது போல அவன் காட்டிக் கொண்டதெல்லாம்கூட மோசடிதானா...

இப்பொழுதுதான் சாரதா அவளிடம் நேரிடையாக கேட்டாள்.

''ஏன் நீங்களும் அவனிடம் இந்த பங்களா விஷயத்தில் ஏமாந்து போயிட்டீங்களா.''

அவள் கண்கள் கலங்கின.

''பூரா பணமும் கொடுத்துட்டீங்களா; என்ன விலை சொன்னான் எத்தனை கொடுத்தீங்க...''

''முழுசா பத்து லட்சம் கொடுத்திருக்கேன். அதற்குப் பிறகு பத்திரம் வாங்க வேண்டியிருக்கும் என்று ஐந்து லட்சம் வாங்கிக் கொண்டான். மொத்த விலை இருபத்தைந்து லட்சம் என்று பேசி முடிவாகியிருக்கிறது. வீட்டுக்காரங்க ஒத்துக்கிட்டாங்கன்னு பவர் ஆப் அட்டர்னி பேப்பர் காண்பித்தான்.''

''அத்தனையும் மோசடி. அவன் உள்ளூர் அரசியல்வாதியின் சொந்தக்காரன். இந்தப் பங்களாவைக் காட்டிப் பல பேரிடம் பணம்

வாங்கியிருக்கான். அது போகட்டும். இப்போ நீங்க என்ன செய்யப் போறீங்க அவனுக்குப்பின்னால் இப்படியொரு கூட்டமே இருக்கு. அவன் மேலே கிரிமினல் நடவடிக்கை எடுங்க ; விடாதீங்க.''

''நான் இனிமே அவனைக் கண்டுபிடிச்சு கிரிமினல் நடவடிக்கை எடுத்தா மட்டும் நான் கொடுத்த பணம் வந்துடுமா. அது நரி தின்னக் கோழி. இனிமே கூவப்போவதில்லை.''

''நீங்க அப்படி நினைக்கவேண்டாம். அந்த நரி தின்னக் கோழி நிச்சயமா கூவும். அவன் இப்படிப் பல பேரிடம் மோசடி செஞ்சு வாங்கின பணத்திலே இங்கே நிறைய நிலம் வாங்கிப் போட்டிருக்கானாம். என்னோட லாயர் ஷண்முகமூர்த்தி சொன்னாரு. அவர் ஒரு நல்ல அட்வகேட், அவரைவைத்து போலீஸ்ல ஒரு ரிப்போர்ட் குடுங்க. இதிலே என்னோட ''பிராபர்டி'' சம்மந்தப்பட்டிருக்கறதுனால நான் அவனைப் பற்றி நிறைய விசாரித்து வைத்துக் கொண்டிருக்கிறேன்...''

சாருலதா எழுந்தாள். சாரதாம்மாளிடம் விடை பெற்று வெளியே வந்தாள். அவள் மனம் ரொம்பவும் சோர்ந்து போயிருந்தது.

பிரபாகரன் மேல் கிரிமினல் வழக்கு போட்டால் என்ன...

தன்னுடைய மானேஜரிடம் விஷயத்தைச் சொன்னாள்.

''இதுக்கெல்லாம் பயப்படக் கூடாதுங்க. அவன் அரசியல் செல்வாக்கு உள்ள ஆளா இருந்தா நமக்கென்ன. நமக்கும் ஆளுங்க இருக்காங்க... பயப்படாம காரியத்தில் இறங்குங்க..''

அட்வகேட் ஷண்முக மூர்த்தி கொடுத்த தைரியத்தில் போலீஸில் புகார் கொடுத்தாள். அவன் கைது செய்யப்பட்டான். அவன் செய்த பரவலான மோசடிகள் உள்ளூர் பேப்பரில் சந்திசிரிக்க ஆரம்பித்தது. ஷண்முகமூர்த்தியின் சாமர்த்தியமான அணுகுமுறையால் அவன் சொத்துக்கள் முடக்கப்பட்டன. இத்தனையும் ஒரு பக்கம் நடந்து கொண்டிருக்கும்போது உள்ளூர் அரசியல் புள்ளியின் தலையீட்டில் ஜாமினில் வெளியேயும் வந்துவிட்டான்.

அவன் ஜாமினில் வெளியே வந்தது முதலே சாருலதாவுக்குத் தலைவலி ஆரம்பமாகிவிட்டது.

போலீஸில் கொடுத்த புகாரை வாபஸ் வாங்கவேண்டும். வழக்கை தொடர்ந்து நடத்தினால் உன் உயிருக்கு ஆபத்து என்று டெலிபோனில் மிரட்டிக் கொண்டிருந்தான். அவன் மிரட்டலால் பயந்து போனவள், போலீஸில் புகார் சொன்னபோது அங்கேயும் ஒரு மாதிரியாகப் பதில் வர ஆரம்பித்து விட்டது.

"என்னம்மா அவன் மிரட்டறான் என்பதற்காக உன் பங்களாவ சுத்தி கருப்புப் பூனையையா பாதுகாப்புக்குப் போட முடியும். அவன் குணம்தான் தெரியுதில்ல. நீயும் படிச்ச பொண்ணு. அந்தாளு கூடச் சமாதானமா போயிடு. வழக்குகளை வாபஸ் வாங்கிக்க எல்லாம் சரியா பூடும்."

"இதை அவள் அட்வகேட்டிடம் சொன்னபோது நமக்கு சேரவேண்டிய பதினைந்து லட்சத்தை தந்துவிட்டால் நாம் தாராளமா "காம்பரமைஸ்" செஞ்சுப்போம்" என்று கூறிவிட்டதால் வழக்கும் விவகாரமும் அப்படியே தொடர்கிறது. வெளியில் இருந்துகொண்டு அவளுக்கு எவ்வளவு தொல்லைகள் கொடுக்க முடியுமோ அவ்வளவு தொல்லைகள் கொடுக்க ஆரம்பித்தான்.

அதன் தொடர்ச்சிதான் வினோத்திடம் அடி வாங்கி மருத்துவமனையில் சிகிச்சை பெற்றதும்....

அதோடு அவளுடைய முதல் காதலும் கருகிப்போய்விட்டது. அதற்குப் பின் அவளுடைய மனம் காதல் என்றாலே கடினப்பட்டுப் போய்விட்டது. உள்ளூரில் இருந்த அவளுடைய சித்தப்பாவும், சித்தியும் எவ்வளவோ முயற்சிகள் எடுத்துக் கொண்டும் அவளைக் கல்யாணத்திற்குச் சம்மதிக்க வைக்கவே முடியவில்லை. பிறகு அவர்களும் வெளிநாட்டிற்குப் போய்விட்டார்கள்.

காதலில் சிக்கி விரோதம் சம்பாதித்துக் கொண்டதோடு அவள் காதல் நினைவுகளுக்கு முற்றுப்புள்ளியை அவளே வைத்துக் கொண்டுவிட்டாள்.

# 10

ஸ்ரீனிவாசநல்லூர் போய் வந்த அசதியுடன் தன் அறையில் படுத்திருந்தாள். வினோத்தின் பெற்றோரைச் சந்தித்துவிட்டு வந்தபின் அவர்களுடைய இயல்பை ஓரளவு புரிந்து கொள்ள முடிந்தது. சம்பிரதாயமான மனிதர்கள். இயல்பான போக்கிற்கு மாறுபட்ட எதையுமே அத்தனை சுலபமாக ஏற்கத் தயங்குகிறவர்கள். இவர்களுடைய மனதில் நான் இடம்பிடித்தாக வேண்டும். மக்னைப் பராமரிக்கும் ஒரு பெண்ணாக மட்டும் அல்ல.... அவனைப் பற்றி மனதில் முளைவிடும் விருப்பத்தை பூர்த்தி செய்து கொள்வதானாலும் கூட அவர்கள் அனுமதி கிடைத்தாக வேண்டும்...

மேலும், வினோத்தின் இன்றைய மனோநிலையில் இன்னும் கொஞ்சம் முன்னேற்றம் வேண்டும்.

வினோத்திற்காகக் காத்திருப்பது என்று முடிவாகிவிட்டால் மனதில் ஊசலாட்டம் இருக்காது...

வினோத்... வினோத்... இப்படி என்னை பயித்தியமாக மாற்றிக் கொண்டு வருகிறாயே... அப்படி என்ன உன்னிடம் இருக்கிறது... இளமை... கம்பீரம்... இந்த இரண்டிற்கும் எது அழகு சேர்க்குமோ அந்த அமைதி... நீ தெரிந்து அப்படியில்லை. அந்தக் குணம் உன்னிடம் இயல்பாகவே இருக்கிறது... கம்பீரமான ஒரு வாலிபனிடம் இருக்க வேண்டிய அத்தனையும் உன்னிடம் இருக்கிறது. என் அளவில் காதல் செத்துவிட்டது என்று கட்டாந்தரையாகிப்போன மனதில் அதை மறுபடியும் துளிர்விட வைத்தவனே... நீயார்... இனி நீயார்... என்னுடன் நீ எப்படி ஐக்கியப் படப்போகிறாய்...

வினோத்தின் நினைவுகள் அவள் உடம்பின் வெதுவெதுப்பை அதிகமாக்கியது. உடனே எழுந்து ஓடிப்போய் அவனைப் பார்க்க வேண்டும் போலிருந்தது...

மணியைப் பார்த்தாள். மணி இரவு பன்னிரண்டு...

படுக்கையில் அவள் புரண்டு புரண்டு படுத்தாள்...

கதவு திறந்து கொள்வதுபோல இருந்தது.

யார் அது... இருளில் முகம் தெரியவில்லை... யார் அது?

மெதுவாக ஜன்னல் பக்கம் நகர்ந்து தோட்டத்தைப் பார்த்தாள். வினோத்தின் அறையில் விளக்கெறிந்து கொண்டிருந்தது... "வினோத்".... ஒருமுறைதான் அவளால் கூப்பிட முடிந்தது. அடுத்த முறை கூப்பிடு முன் நிலை வாயிற்படியில் நின்ற உருவம் வேகமாக மேலே பாய்ந்து அவள் வாயைப் பொத்தி அவளைக் கீழே சாய்த்தது. அவள் பயத்தில் என்ன செய்வதென்று தெரியாமல் தடுமாறினபோது அறையில் விளக்கு எரிந்தது. நிலை வாயிற்படியில் வினோத் நின்று கொண்டிருக்க சாருலதாவைத் தரையில் சாய்த்து அவள்மேல் உட்கார்ந்திருந்த பிரபாகரன் அவசரத்தில் எழுந்து வினோத்தைத் தாக்க வந்தான்.

"நான் உன்னையும் உன் நண்பர்களையும் ஒரு முறை மன்னித்தேன். வர்மக் கலையை உபயோகப்படுத்தி தற்காத்துக் கொள்ளத்தான் என் குரு எனக்கு அனுமதியளித்திருக்கிறார். எதிரியை அப்படியே ஒன்றுக்கும் பயன்படாத மாதிரி ஒன்றும் செஞ்சுடக் கூடாது என்று சொல்லியிருக்கார். நான் உன்மேல் கைவைத்தால் உன்னை ஒருமணி நேரத்திலும் தீர்த்துக் கட்ட முடியும். ஒரு வாரத்தில் கொஞ்சம் கொஞ்சமாகவும் தீர்த்துக் கட்ட முடியும். மரியாதையாக வெளியே போய்விடு..."

அவன் பேசிக் கொண்டிருக்கும்போதே வினோத்தின் மேல் அவன் பாய்ந்தான். இந்த முறை அவன் வர்மத்தை உபயோகப்படுத்தவில்லை. ஒரு சாதாரண சண்டைக்காரனிடம் சண்டைபோடுவது போலவே போட்டான். அதையே சமாளிக்க முடியாமல் தடுமாறினான் பிரபாகரன்.

உனக்கும் எனக்கும் முடிவாக இன்னொரு சண்டையிருக்கிறது. அதோடு உன் திமிர் அடங்கிவிடும். அதற்குப் பின் நீ எழுந்து

நடமாடவே முடியாமல் போகப் போகிறாய். வேண்டாம். அந்த நிலையை உண்டாக்கிக்காதே. உன்னால் என்னையோ சாருலதாவையோ ஒண்ணுமே செய்ய முடியாது. நீயொரு படையே திரட்டிக் கொண்டு வந்தாலும் அழியப் போவது என்னவோ நீதான்... அவன் பேசிக்கொண்டே அவனைத் தாக்கினான். பிரபாகரனும் பதிலுக்குத் தாக்கி நான்கு முறை கீழே விழுந்து பின்பு முகத்தில் ரத்தம் சொட்டச் சொட்ட எழுந்தான்.

"ஏய் சாருலதா! நீ என் சொத்துக்களையும், பேங்க் கணக்கையும் முடக்கி வச்சிட்டதுமில்லாம கிரிமினல் கேஸ் வேற போட்டிருக்கே... அதை வாபஸ் வாங்கற வரையிலே உன்னைச் சும்மா விடமாட்டேன். கூட ஒரு அழகான வாலிபனைச் சேர்த்துகிட்டிருக்கிற தைரியமாடி... வெட்கங் கெட்டவளே இந்தப் பய இருக்கற திமிறு உனக்கு. ரெண்டு பேரையும் சேர்த்தே அழிக்கறேன்" என்றவன்.

"ஏண்டா வர்மக்கலை தெரிஞ்சவன்ங்கற திமிரா... உன்னைவிட அப்பனையெல்லாம் எனக்குத் தெரியும். உன்னைச் சமாதிகட்ட ஒரு ஆள ஏற்பாடு பண்ணிட்டேன். அடிபட்ட நாலாவது மணிநேரத்தோட நீ போய்டுவே..."

சாருலதா பிரமை பிடித்தவள் போல நின்று கொண்டிருந்தாள். மனிதர்களுக்கு எப்பொழுதுமே இரண்டு முகங்கள் உண்டு என்பார்களே; அன்று இனிக்க இனிக்கப் பேசிய பிரபாகரனின் மற்றொரு முகமா இது...? இவ்வளவு கொடூரமானவனா இவன்! கடவுளே என் வாழ்க்கையை நீதான் காப்பாற்றினாய், உனக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். பிரபாகரன் என்கிற மிருகத்தைத் தெரிந்து கொள்ள நான் பதினைந்து லட்சம் இழந்திருக்கிறேன். பதினைந்து லட்சம் போனால் போகட்டும். இந்த அயோக்கியனைப் புரிந்து கொண்டேனே அதுவே போதும்.

"இப்பவேகூட உன்னை நடக்கமுடியாம ரெண்டு பேர் தூக்கி கிட்டு போற மாதிரி செஞ்சுடுவேன். ஆனா இப்ப நான் அப்படிச் செய்யமாட்டேன். உன்னை நடமாட விட்டு நீ என்னை அழிக்க

யாரையோ ஏற்பாடு செஞ்சிருக்கேன்னு சொன்னியே அவனையும் சேர்த்தே கவனிச்சுக்கறேன்...."

பிரபாகரன் உறுமிக் கொண்டே வெளியேறினான்.

பயந்து போய் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தாள் சாருலதா. அவள் அருகில் வந்து நின்றான் வினோத்....

''நான் இருக்கும்போது நீங்க கொஞ்சம்கூடப் பயப்படக் கூடாது... நான் பாம்பின் நடமாட்டத்தையே மோப்பம் பிடித்து விடுகிறவன். எதிரிகள் எனக்கு எம்மாத்திரம்.... இவன் சாதரணமாக வரவில்லை. முதலில் ஒரு மாந்திரிகனிடம் கூறிப் பாம்பை ஏவிவிட்டு விட்டு பின்னால் வந்திருக்கிறான்." என்றவன் அந்த அறைபூராவும் எதையோ தேடினான். ஒரு பீரோ சந்தில் கை விட்டபோது அங்கிருந்த நாகம் சீறிப் படமெடுத்தது. சிரித்துக் கொண்டே கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான்.

''என்னடா அன்னிக்குச் சாந்தமா போனே, இன்னிக்குக் கோபப்படறே... வா... நான் உன்னை ஒண்ணும் செய்யமாட்டேன்..." அது மீண்டும் சீறியது... சாருலதா பயத்தில் கத்தினாள்... அங்கிருந்த கருப்பு போர்வையொன்றை மேலே போர்த்திக் கொண்டவன், மீதமுள்ள போர்வைத் துணியை அதன் மேல் போட்டு அதை அப்படியே பிடித்தான். அது அவனிடம் திமிறியது... பிறகு அமைதியாகிவிட்டது.... சில வினாடிகளில் அது அவனிடம் சினேகமாகிவிட்டது. போ.... இனிமே யார் வரச் சொன்னாலும் இங்கே வரக்கூடாது... சத்தியம் பண்ணிக்குடு... அது படமெடுத்துத் தரையில் அடித்தது... அதை வெளியே இருளில் வீசி எறிந்தான்....

"நிம்மதியா தூங்குங்க..."

"தூங்கறதா அதுவும் நிம்மதியாவா ?"

பயத்தில் அவள் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தான்.

அவளை அழைத்துக் கொண்டு போய் படுக்கையில் உட்காரவைத்துவிட்டுக் கொஞ்சம் அலங்கோலமாக இருந்த அறையை ஐந்தே நிமிடத்தில் ஒழுங்குபடுத்தினான்.

''நீ இங்கேயே படுத்துக்கோ''

''இங்கேயா?''

''ஆமாம் ஏன்?''

''பாக்கறவங்க ஏதாவது நெனச்சிக்கப் போறாங்க.''

''யார் என்ன நெனச்சுகிட்டா நமக்கென்ன? இது என்னோட அறை. என்னோட இடம். என்னோட பங்களா. இதில் என் இஷ்டப்படி இருக்க எனக்கு உரிமையுண்டு. அதை யாரும் தடுக்கவும் முடியாது. நானோ, நீயோ பிறருடைய சந்தோஷங்களைப் பறித்துக் கொண்டு வாழ வில்லையே.''

''அதில்லை. உங்க அந்தஸ்து, படிப்பு'' உங்க செல்வாக்கு.... நீங்க என்னோட ரொம்ப அன்பா பழகறதுனால நான் அதிக சலுகைகள் எடுத்துக்கக் கூடாது இல்லையா?

''போதும் நிறுத்து. என்ன அந்தஸ்து, என்ன செல்வாக்கு?''

''நீங்க சேலம் ஆபீசுக்கும் பாக்ட்ரிக்கும் போனா எத்தனை பேர் உங்க பின்னால வராங்க. மேடம், பாஸ்-னு தூரமா நின்னு பேசறாங்க... மரியாதை செலுத்தறாங்க...''

தெளிவாகப் பேசும் வினோத்தை வியப்புடன் பார்த்தாள். மனம், வாக்கு, சிந்தனை அளவில் இவன் தெளிவாகிக் கொண்டு வருகிறான் என்று எடுத்துக் கொள்ளலாமா.

''இந்தச் செல்வாக்கும் அந்தஸ்த்தும் எனக்கு ஒரே நாளில் வந்தது. இவ்வளவு சொத்துக்களை நானா சம்பாதித்தேன். இல்லையே! இந்த மாபெரும் செல்வாக்கைப் பெற்றோரைப் பறிகொடுக்கக் காரணமான அந்த விபத்து என் தலையில் சுமத்திவிட்டது. வேண்டாமென்று நான்

ஓட முடியாது. ஏனென்றால் இந்தத் தொழிலை நம்பி வெளியே பல குடும்பங்கள் இருக்கு.

இப்பொழுது இதைச் சொன்னால் இவன்புரிந்து கொள்வானோ... நிச்சயம் புரிந்து கொள்வான்.

சொன்னாள்.

அவைகளைக் கேட்டு அவன் மௌனமாகத் தானிருந்தான். அது அவன் இயல்பு.

என்ன பெரிய படிப்பு. உன்னைப் பார்க்கும்போது என் படிப்பெல்லாம் லௌகிக சௌகரியங்களுக்காக மட்டுமே பயன்படக்கூடியவை. சிதம்பரத்திடம் நீ கற்றுக் கொண்டதற்கு முன்னால் என் படிப்பெல்லாம் ஒன்றுமேயில்லை. பிராணிகளிடம் பேசறே. அதோட சினேகமா பழகறே. படமெடுத்து நிக்கர பாம்பு உன் பேச்சைக் கேட்டு அப்படியே கட்டுப்படறது. பிரமாதமா ஓவியம் போடறே, மாந்திரீகம், தாந்தரீகம் உனக்குத் தெரிந்திருக்கு. ஆனா அவைகளை நீ உபயோகிக்க வேண்டாமென்று முடிவு செஞ்சிருக்கேன்னு நினைக்கறேன். இவைகளுக்கு முன்னால் என் படிப்பு, அந்தஸ்து, செல்வாக்கு என்பதெல்லாம் ஒண்ணுமேயில்லை'' – என்றாள் நெகிழ்ச்சியுடன்.

''அப்படியில்லை இங்கே உங்ககூட நான் பேசறதையும், பழகறதையும் பார்த்துச் சிலர் வேறு விதமா பேசறாங்க...'' என்றான்.,

''அது எனக்கும் தெரியும்... அதை நான் பொருட்படுத்தவில்லை. நாம் பிறர் விருப்பங்களுக்காக வாழ்வதைவிட நம் விருப்பங்களுக்காக வாழவேண்டும். உன்னுடன் என்னை இணைத்துப் பேசுவதை நினைத்து நான் கவலைப்படவேயில்லை. இந்த வினோத்திடம் புதைந்திருக்கும் ஆபூர்வத்தன்மைகள் எனக்குத் தெரியும். அவை எனக்குமட்டுமே சொந்தமாக வேண்டும்.'' அவனை அருகில் உட்காரவைத்துக் கொண்டாள்.

அவனுடன் இந்தத் தனிமையிரவில் இன்னும் அதிக சுதந்திரத்துடன் நடந்து கொள்ள அவள் மனம் துடித்தது.

அவளுடைய கரம் அவனுடைய இடுப்புப்பக்கம் வந்து மெதுவாக வளையம் போட்டது.

அவள் முகம் வினோத்தின் முகத்திற்க்கு அருகில் வந்தது. கண்கள் ஒன்றோடு ஒன்று ஊடுருவிப் பாய்ந்தது. இப்பொழுது அவன் கரம் தன்னிச்சையாக அவள் இடுப்பைச் சுற்றிக் கொண்டது.

இரண்டு பேருடைய உடம்பும் மேலும் நெருங்கின.

அவன் உதட்டில் தன் உதட்டைப் பதித்தபோது இத்தனை நாள் உள்ளோட்டமாகக் கனன்று கொண்டிருந்த வேகம் அவள் உடம்பு பூராவும், அங்கங்கள் பூராவும், உணர்வுகள் பூராவும் ஒருமித்துச் செயல்படத் தயாராகிக் கொண்டிருந்தன.

அதே போல் அவனிடத்திலும் அந்த வளர்ச்சி அடைந்த வாலிப வேகம் இருப்பதை உணர்ந்து மெய் மறந்தாள்.

வெறும் ஆலிங்கணத்தில் தொடங்கியது பின் ஆவேச உணர்வுக்குள் பிரவேசித்தது.

சாருலதா பரவச நிலையில் படுக்கையில் நெளிந்தாள்.

''வினோத்... என் வினோத் நீ எனக்கு வேணும். நீ இல்லாமல் என்னால் இனி ஒரு நாள்கூட இருக்க முடியாது. உன்னுடைய இம்மாதிரி அணைப்புக்குத்தான் இந்த உடம்பு காத்திருந்ததடா என்னை இன்னும் இறுக்கமாகக் கட்டிக்கொள். அப்படியே ஆவி பிரிகிற மாதிரி இறுக்கிக்கொள். நான் அப்படியே ஜடராக்கினிக்குள் புகுந்து வெளியே வரவேண்டும்.''

அவனை இறுக்கமாகக் கட்டிப்பிடித்துப் படுக்கையில் படுத்தபடி கெஞ்சினாள்.

இந்தக் காதல் வெள்ளத்தில் இருவரும் கரை தெரியாமல் அடித்துச் செல்லப்பட்டு முடிவில் பிரவாகத்திலிருந்து ஒதுக்கப்பட்டவர்கள் போல.....

அவர்கள் பிடி தளர்ந்தது.

# 11

காலையிலேயே சேலத்திலிருந்து டிரைவர் வந்து காத்திருந்தார்.

ஒன்பது மணி சுமாருக்கு வினோத்துடன் சாருலதா கோவை புறப்பட்டாள். புறப்படும் வரை அவள் எங்கே போகிறாள் என்பது யாருக்கும் தெரியாது.

வினோத்துடன் காரில் ஏறி அமர்ந்தவள், டிரைவரிடம் தனிந்த குரலில் கோவை ஒண்டிப்புதூர் டாகூர் நகர் போகணும்...

''போகலாங்க''.

கார் புறப்பட்டது. வினோத்திடமும் ஒன்றும் சொல்லவில்லை.

நான்கு மணிநேர ஓட்டத்திற்குப்பின் அவளுடைய டாடா சுமோ கார் கோவை ஒண்டிப்புதூர் பகுதி டாகூர் நகர் நான்காவது குறுக்குத் தெருவில் உள்ள டாக்டர் சடகோபனின் பெரிய மருத்துவமனை தோட்டப் பகுதிக்குள் நுழைந்து நின்றது.

டாக்டர் சடகோபன் பிரபலமான மனோதத்துவ நிபுணர்...

அவரிடம் ஏற்கனவே இண்டர்நெட்டில் உரையாடி வினோத்தைப் பற்றித் தனக்குத் தெரிந்த தகவல்களைத் தெரிவித்து அவருடைய நேரிடையான பரிசோதனைக்கு அனுமதி பெற்றிருந்தாள்.

மாலை நேரத்தில் அவனைப் பரிசோதிக்க நேரம் ஒதுக்கியிருந்தார்.

இருபது வயதில் மனநிலை பாதிக்கப்பட்டு இருந்ததிலிருந்து இன்றுவரை சடகோபனைப் போன்ற பிரபலமான டாக்டர் அவனைப்

பரிசோதனை செய்ததேயில்லை. அதற்கும் அவனுடைய ஏழ்மைதான் காரணம்.

டாக்டர் சடகோபன் தமிழகத்தில் விரல் விட்டு எண்ணக்கூடிய மனநோய் மருத்துவர்களில் ஒருவர். அரசினர் மனநோய் காப்பகத்திலும், சென்னை மனநோய் மருத்துவக் கல்லூரியில் சில காலம் பேராசிரியராகவும் பல இடங்களில் மனநோய் மருத்துவப் பிரிவின் தலைவராகவும் இருந்தவர்.

வினோத்தைப் பல நிலைகளில் பரிசோதித்து விட்டு அவனிடம் ஒரு கேள்வி கேட்டார்.

உனக்கு உன் சின்ன வயதில் நடந்த நிகழ்ச்சி ஏதேனும் ஒன்றை நினைவுபடுத்திச் சொல்லு பார்க்கலாம்.

பெரியப்பாகிட்டே மாந்திரீகம், தாந்தரீகம், வர்மக் கலையெல்லாம் கத்துண்டேன். அது மட்டும்தான் ஞாபகமிருக்கு. நான் எப்படி அங்கிருந்து வந்தேன், ஏன் வந்தேன் என்று ஒன்றும் தெரியவில்லை. ரொம்ப உயரமான இடத்திலிருந்து கீழே விழறமாதிரி இருந்தது. தலை ஏதோ இரும்பிலே அடிப்பட்ட மாதிரி வலித்தது. அது தலை எதன் மேலாவது மோதினதால் ஏற்பட்டதா. இல்லே எனது நினைவில் இயக்கம் முழுமையா நின்னுபோய், மறுபடியும் நினைக்க முடியாம போனதுனால ஏற்பட்டதான்னு தெரியல."

சடகோபன் சிரித்துக்கொண்டார். வினோத்தின் பதிலால் அவர் திருப்தியடைந்துவிட்டார்.

"இவனுக்கு இதை எப்பொழுதோ சரி செய்திருக்கலாம். சரியான கவனிப்பு, போஷாக்கு இல்லாததால் கொஞ்சம் காலதாமதமாகி யிருக்கு" என்றவர்,

"உலகில் உதவாக்கரை என்று எதுவுமேயில்லை. உயிர் உள்ளவரை வளர்ச்சியும் இருக்கும்." என்கிறார். உலகில் சிறந்த மனோத்துவ ஞானி மார்த்தாளக் என்பவர்,

மன வளர்ச்சி என்பது வயதை
உண்மையான வயதால் வகுத்து நூறால்

பெருக்கி அடையும் எண்ணே ஆகும். மனவளர்ச்சி என்பது வயது உளவியல் தேர்வுகளால் கணக்கிடப்படுகிறது. 90 முதல் 110 வரை அறிவு எண் உள்ளவர்கள் சராசரி அறிவுத்திறன் படைத்தவர். எழுபதுக்கும் குறைவாக உள்ளவர்கள் மனவளர்ச்சி குறைந்தவர் களாகக் கருதப்படுவார்கள். அறிவின் எண் மேலும் மேலும் குறையக் குறைய அவர்கள் மனவளர்ச்சி குறைந்ததாகவே கருதப்படும். (மன நோயும் இன்றைய மருத்துவமும் என்ற நூலில் டாக்டர் ஒ சோமசுந்தரம். டாக்டர் ஜெய ராம கிருஷ்ணன்) – பக்கம். 140

''வினோத்திடம் இம்மாதிரி அளவுமானியில் அறிவுஎண்ணில் ஏற்றத்தாழ்வு இல்லை. மிகச்சீராக இருக்கிறது. இருபத்தைந்து வயது வரை ஒரே மாதிரியாக வளர்ந்து, பேசி, பழகியதால் ஏற்பட்ட சில சில சிறு பாதிப்புகளைத் தவிர, அதற்கு விசேஷ காரணம் ஏதுமில்லை. ஏதோ ஒரு கால கட்டத்தில் விபத்துபோல நடந்த அந்த நிகழ்ச்சிக்குப்பின் இவன் பெற்றோர் இவனை அதிக அக்கறை எடுத்துக் கவனிக்கவில்லை. அதன் குறைபாடுதான் இத்தனை நாள் அவனிடம் இருந்திருக்கிறது. உன்னுடைய கனிவான சினேகம், அன்பான அணுகுமுறை, முறைப்படியான நல்ல ஊட்டச்சத்துள்ள சாப்பாடு, அவன் போக்கிலேயே அவனைவிட்டு அவனுடைய மற்ற திறமைகளை மதித்தது, பாராட்டியது, அவனை ஒரு முழுமையான வாலிபனாக மாற்றியிருக்கிறது. மனோதத்துவ நூல்கள்கூட இதைத்தான் வலியுறுத்துகின்றன. அவரவரிடம் இருக்கும் திறமையைப் புரிந்துகொண்டு அதை உற்சாகப்படுத்தினாலே அபரிதமான வளர்ச்சியைப் பார்க்கலாம். அவன் வழியில் அவனைச் செயல்படவைத்து அவன் மாற்றத்திற்கு வழி வகுத்துக் கொடுத்திருக்கிறாய். அதுவே ஒரு சிகிச்சை முறைதான்''.

''ரொம்ப நன்றி டாக்டர். இவனைப்பற்றி எனக்கிருந்த பயம் இப்பொழுது போய்விட்டது.''

''சாருலதா உன்னிடம் ஒரு கேள்வி கேட்கலாமா ?''

''கேளுங்க டாக்டர்.''

''இவனைப் பற்றிய எல்லாவிவரமும் சொன்னே. ஏழை, ஆபூர்வ குணங்கள் கொண்டவன், மாந்தீரிகம், தாந்தரீகம் தெரிந்தவன். என்றெல்லாம் கூறினாய். எல்லாம் சரி, இவன் மேல் உனக்கென்ன இத்தனை அக்கறை.''

தர்ம சங்கடமான கேள்விதான் என்றாலும் அவரிடம் அவள் எதையும் மறைக்க விரும்பவில்லை. ஒரு மனோதத்துவ டாக்டர் என்ற முறையில் அவருடைய அபிப்ராயமாக எது வந்தாலும் அதையும் பரிசீலிக்கலாமே என்ற முடிவுடன்.

''தனி அக்கறைதான் டாக்டர். இது சரியா, தவறா என்று ஒரு டாக்டர் என்ற முறையில் நீங்கள்கூட கருத்துக் கூறலாம். இவரை மனரீதியிலும், உடல் ரீதியிலும் சரியாக்கி என்னுடையவராக்கிக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஆனால் எங்களிருவருக்கும் ஐந்து வயது வித்தியாசமிருக்கிறது. இவர் என்னைவிட ஐந்து வயது இளையவர்.''

வயது ஒரு பிரச்னையே இல்லை. நடைமுறை வாழ்க்கையில் இம்மாதிரி நிறைய முன்னுதாரணங்கள் என்னால் சொல்ல முடியும். எனது அட்வகேட் நண்பர் ஒருவர், ஒரு சகடாக்டர் எனக்குத் தெரிந்த கல்லூரி பேராசிரியர் - இப்படி நிறைய சொல்லலாம்.சாஸ்த்ரரீதியில் கூட இதற்கு அங்கிகாரமோ, எதிர்ப்போ இரண்டுமேயில்லை என்றே நினைக்கிறேன். ஓர் ஆணையும், பெண்ணையும் விவாக மந்திரங்கள் சேர்த்துவைக்கின்றனயேன்றி இதில் யார் பெரியவர், யார் சின்னவர் என்று அந்த மந்திரங்களும் கவனிப்பதில்லை, சாஸ்த்திரங்களில் இது பற்றி இல்லாத காரணத்தினாலோதான் என்னவோ வயதான ஆண் சிறுபிராயத்துப் பெண்ணை மணப்பதும், வயதில் பெரியவள் தன்னைவிட வயதில் குறைவாக உள்ளவனை விரும்பி மணப்பதும்,

தொன்றுதொட்டே சாதாரணமாக நடக்கின்றன'' – என்றார் டாக்டர் சடகோபன்,

''நானும் கொஞ்சம் நீதி சாஸ்த்ர நூல்களும் இந்து தர்மங்களைப் பற்றிய புஸ்தகங்களும் படித்திருக்கிறேன். விவாக மந்திரங்களில்கூட இந்த வயது குறிப்பு எந்த இடத்திலும் வருவதாகத் தெரியவில்லை. விவாக மந்திரங்களின் ஆரம்பத்திலிருந்து அந்த விவாகத்தை முடித்துவைக்கும் மந்திரமான சேஷ ஹோம மந்திரம் வரை பார்த்தால் எந்த இடத்திலும் இந்த வயதுக்குறிப்பு இல்லை. நல்ல பெண்ணாக வாழ்வாயாக, கணவன், மாமனார், மாமியார், கணவனின் உடன் பிறந்தோர், கணவன் வீட்டில் இருக்கும் பசு முதலிய பிராணிகள், என்று எல்லா உயிர்களிடத்தில் அன்பாக இருப்பாயாக, நல்ல குழந்தைகளைப் பெறுவாயாக, எல்லோருக்கும் பணிவிடை செய்வாயாக என்று சொல்றதே தவிர வேறு எதுவும் சொல்லவில்லை.

நமது விவாகங்களைப் பற்றி மனுவும், வியாசரும் யக்ஞவல்கியரும் நிறைய வழிமுறைகளைக் கூறியிருக்கிறார்கள். ஆனால் வயசைப்பற்றிக் கூறவில்லை. உடல் ரீதியில் அங்கிகாரம் தான்முக்கியம். இதில் நிறைய உள்ளர்த்தங்கள் உண்டு. அவை பூராவையும் விளக்க வேண்டுமென்பதில்லை. ஓர் ஆண் மகன் என்பவன் த்ன் மனைவியைத் திருப்திபடுத்த வேண்டும்... இதுதான் முக்கியம்....''

சாருலதா வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டாள்.

''அந்த விஷயத்தில் எனக்கு இவரிடம் எவ்விதச் சந்தேகமும் இல்லை'' டாக்டர் என்றாள்.

டாக்டர் புரிந்து கொண்டார்.

''பிறகென்ன கோ அஹெட்.... என்ன கொஞ்ச நாளைக்கு நம்மைச் சுற்றி இருப்பவர்கள் வாய்க்கு வந்தபடி பேசுவார்கள். அதை அலட்சியப்படுத்திவிட்டுப் போய்க் கொண்டேயிருக்க வேண்டியதுதான்.''

''அதை நான் சமாளித்துக் கொள்வேன்.''

இத்தனை நேரம் டாக்டருக்கும் அவளுக்கும் நடந்த சம்பாஷனை ஆங்கிலத்திலேயே இருந்தது. வினோத் அதைக் கவனமாகக் கேட்டான்.

வினோத்துடன் அவள் எழுந்தாள். அவன் தோளில் சினேகத்துடன் கைவைத்தார் டாக்டர்.

இவனிடம் இருக்கும் பல அதிசய குணங்கள் பற்றி நீ இண்டர் நெட்டில் விவரித்தபோது எனக்கே ஆச்சரியமாக இருந்தது. இப்பொழுதும்கூட தான் வளர்க்கும் செல்லப் பிராணிகளிடம் மனிதர்களிடம் பேசுவதுபோல் பலர் பேசுவதை நாம் பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம். புராணங்களில் இப்படி நிறைய குறிப்புகள் வருகின்றன. நான் படித்திருக்கிறேன். விக்கிரமாதித்தன் கதைகளில் பறவைகள், மிருகங்கள் பேசுவதாகப் பல இடங்கள் வரும். பசுவின் கழுத்தில் கட்டியிருந்த கயிற்றைத் தாண்டிக் கொண்டு போகிறவனைச் சுட்டிக் காட்டித் தன் தாயிடம் ஒரு கன்றுக்குட்டி ''இவன் ஏன் அம்மா இப்படித் தரிகெட்டுப்போகிறான், மாட்டின் கயிற்றை தாண்டக் கூடாது என்கிற ஞானம்கூடத் தெரியாதவனாக இருக்கிறானே'' என்று கேட்க, ''இவனா! இவன் ஒரு மூடன். தாய் என்று கூடத் தெரியாமல் அந்தப் பெண்மணியிடம் இன்பம் தேடிப்போகிறான்''. என்று கூறுகிறது தாய்ப்பசு. மாடு கன்று ஆகிய இவற்றின் சம்பாஷனையைக் கேட்ட அரசன் தான் செய்யவிருந்த தவறுக்காக வெட்கப்பட்டு வருந்தி திரும்பிப் போகிறான். அனேகமாக இது விக்கிரமாதித்தன் கதையில் வரும். மங்கையர்கரசிக் கதை என நினைக்கிறேன்.

ராமாயணத்தில் வரும் கேகய மகாராஜன் தன் பட்டத்து ராணியுடன் கட்டிலில் சயனித்திருக்கும்போது கட்டிலின் கீழே ஊர்ந்து சென்ற எறும்புகள் பேசிக்கொண்டு போனதைக் கேட்டு புன்னகை செய்தானாம்.

ராணி மகாராஜாவிடம் ஏன் சிரித்தீர்கள் என்று கேட்டாளாம். அதற்குக் கேகய மகாராஜா, ''நம் சயனக்கட்டிலுக்கடியில் ஊர்ந்து

போய்க் கொண்டிருக்கும் எறும்புகள் பேசிக்கொண்டு போனதைக் கேட்டேன் சிரிப்பு வந்துவிட்டது'' என்றாராம்

''என்ன பேசிக்கொண்டு போயின?''

''மன்னிக்கவேண்டும் ராணி, அவை தேவ ரகசியம். அதை வெளியே சொன்னால் உயிருக்கு ஆபத்து நேரும்'' என்று கூறிவிட்டாராம். மேலும்,

வேதாந்த தேசிகரைப்பற்றிப் படிக்கும்போதுகூட அவர் பல அதிசயங்களை நிகழ்த்திக்காட்டியதாகச் செய்திகள் கூறுகின்றன.

உமக்குப் பாம்பை அடக்கத் தெரியுமா என்று பாம்பாட்டி கேட்டானாம். உடனே வேதாந்த தேசிகர் கருட மந்திரத்தைக் கூறி பாம்பைத் தன் வசப்படுத்தினாராம்.

நாரத புராணத்தில் வரும் ஒரு செய்தியைக் கேட்டால் நீ ஆச்சரியப்படுவாய். கானத்தில் சிறந்தவர் நாரதர் என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட நாரதர் ''கான பந்து'' என்ற ஒரு கோட்டானிடம்தான் தன் ஆரம்ப கால சங்கீதத்தைக் கற்றுக் கொண்டாராம். அதற்குப் பின்பு ருக்மினி, கிருஷ்ணன் போன்றவர்களிடம் ஸ்வர ஞானத்தைக் கற்றார் என்று நாரத புராணம் கூறுகிறது...

ஏதோ விட்ட குறை தொட்ட குறை என்று நம் முன்னோர் கூறுவார்கள்... அப்படித்தான் இதை எடுத்துக்கொள்ள வேண்டும்'' என்றவர், வினோத்தைப் பார்த்து...

''நீ சிதம்பரத்திடம் நிறைய வித்தைகள் கற்றுக் கொண்டிருக்கிறாய் என்று சாருலதா சொன்னாள்... எங்கே எனக்காக ஒன்றிரண்டு மட்டும் செய்து காட்டேன், எனக்கும் சின்ன வயதில் இதுமாதிரி வித்தை என்றால் பிடிக்கும்'' என்றார்.

''எப்படிப்பட்டதா இருக்கலாம்?''

''எப்படி வேணா இருக்கலாம்.''

''எல்லாமே ஹிப்னாடிஸம் சம்மந்தப்பட்டதுதான். அதாவது மனோவசியம். கொஞ்ச நேரம் உங்க மூளை இயக்கத்தை என் வசமாக்கிக் கொள்ளுதல்...'' என்று கூறிவிட்டு... அவனது வலது கைவிரல்களை டாக்டரின் முகத்திற்கு நேராக நீட்டியபோது அவருக்கு ஒரு கட்டளை பிறப்பித்தான். அத்தனை நேரம் பேசிக்கொண்டிருந்த டாக்டர் சாவி கொடுக்கப்பட்ட பொம்மை போல செயல்பட ஆரம்பித்தார். சாத்தியிருந்த கதவைத்திறந்து கொண்டு படிகளில் ஏறி மூன்றாவது மாடிக்குப் போய்விட்டார். அவரைத் தொடர்ந்து சாருலதாவும், வினோத்தும் போக அங்கே அவரை மனோவசியத்திலிருந்து விடுவித்தபோது, தான் எப்படி இங்கே வந்தோம் என்று அவருக்கே தெரியவில்லை. இதைப் பார்த்து சாருலதா வியந்து போனாள்.

''நான் என்னுடைய லேப்பில் தானே பேசிக் கொண்டிருந்தேன்...''

''நீங்கள்தானே ஒரு ஐட்டம் செஞ்சுகாட்டச் சொன்னீங்க...''

''சாருலதா, வினோத் இப்போ நூத்துக்கு நூறு சரியாகி விட்டான். அவனைச் சோதிக்கத்தான் இதைச் செய்யச் சொன்னேன்'' என்றார்.

''எனக்கு இவற்றின் பேரில் அதிக ஈடுபாடு இல்லே டாக்டர், வேண்டா வெறுப்பாகத்தான் கற்றுக் கொண்டேன். படிக்கணும், நல்ல உத்தியோகத்துக்குப் போகணும், நாலு பேருக்கு முன்னால் கவுரவமா வாழணும்கறதுதான் சின்ன வயசிலிருந்தே என் ஆசை. அதனால இதை அடியோடு விட்டுவிடவும் முடிவு செய்திருந்தேன். இனியும் அப்படித்தான். ஊர் ஊரா போறதும், கூட்டம் கூட வச்சு வித்தைகாட்டறதும், துண்டு போட்டுப் பணம் வசூல் பண்றதும்... எனக்குக் கட்டோடு பிடிக்கலே. எனக்குப் படிப்பு ஏறலே. வீட்ல சாப்பாட்டுக்குக் கஷ்டம். வேற வழியில்லாமல் அந்த வித்தைக்கார பெரியப்பாகிட்டே போனேன். எல்லாத்தையும் கத்துகிட்டேன். இன்னொரு கண்கட்டி வித்தை செய்து காட்டட்டுமா டாக்டர்.''

டாக்டர் சம்மதித்தார்.

"உங்கள் கோட் பையில் மணிபர்ஸ் இருக்கா பாருங்க."

அவர் அதை வெளியே எடுத்துக் காட்டினார்.

மீண்டும் அவன் கைகளை நீட்டி மடக்கினான்.

"சாருலதா, உங்க ஹேண்ட் பேக்கில் இருக்கும் டாக்டரோட பர்ஸை எடுத்து அவரிடம் கொடுங்க" என்று அவன் சொன்னபோது டாக்டர் தன் கோட் பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்தபோது அங்கே மணிபர்ஸ் இல்லை.

வியப்புடன் தன் கைப்பையை அவசர அவசரமாகச் சாருலதா திறந்தபோது டாக்டரின் மணிபர்ஸ் அங்கேயிருந்தது. சாருலதா அசந்துபோய் விட்டாள். டாக்டரிடம் அதைக் கொடுத்தாள்.

அதைத் திறந்து பார்த்த டாக்டர் அதிர்ச்சி அடைந்தார்.

இதில் இருந்த பணம், கிரிடிட் கார்ட், சேலம் ராக்கிப்பட்டி பாலமுருகன் ரட்ஷை ஒன்றையுமே காணோமே என்று பதறினார்... அவன் மீண்டும் தன்விரல்களை நீட்டி கண்களை மூடித்திறந்தான்.

"உங்களோட இரண்டு கைகளை நீட்டுங்கள் என்று சொல்லிவிட்டு சாருலதாவிடமிருந்து அவளுடைய சிகப்பு நிற கைக்குட்டையை வாங்கி முன்புறமாக நீட்டிக் கொண்டிருக்கும் அவர் உள்ளங்கையை மூடினான். இரண்டே வினாடிதான் கைக்குட்டையை எடுத்தான். மணிபர்ஸில் இருந்த ஐந்நூறுரூபாய் நோட்டுகள் பாலமுருகன் ரட்ஷை, இரண்டு கிரிடிட் கார்டு எல்லாம் அவர் நீட்டிய இரண்டு கரங்களில் இருந்தன.

டாக்டரும், சாருவும் அவனிடம் உள்ள அந்தத் திறமையால் மெய்சிலிர்த்தார்கள்...."

"இத்தனை திறமை உன்னிடம் இருப்பதைப் பார்த்து நான் பெருமைப்படுகிறேன் வினோத்...."

இவைகளை மறக்கணும்னு நான் முயற்சி செஞ்சுகிட்டு இருக்கேன். இது எதுவுமே எனக்கு வேண்டாம் டாக்டர். நான் நானா

இருக்கவே ஆசைப்படறேன். அதைவிட வேறு ஒரு முக்கியமான விஷயம். என்னுடன் சேர்த்து சிதம்பரத்திடம் மூன்று பேர் நேரிடையான சிஷ்யர்களாக இருந்தோம். அதில் ஒருவன் நடுவிலேயே வேறு வேலை தேடிக்கொண்டு போய்விட்டான். மீதி நாங்க ரெண்டுபேர் இருந்தோம். அதில் ஒருத்தன் வர்மக்கலையையும் கூடவே கற்றுக் கொண்டு வந்தான். நான் ஒருத்தன்தான் முறையாக வித்தைகள் கற்க ஆரம்பித்தேன். ஆனால் அவை சிதம்பரத்தின் மரணத்துடன் பாதியில் நின்றுவிட்டது. சிதம்பரம் இருக்கும்போதே கூட ஏதோ ஒரு பழமையான முறையில் செய்ததையே திரும்பத் திரும்பச் செய்து கொண்டிருந்தாரே தவிர இன்றைய நவீன வாழ்க்கை எதிர்பார்ப்புகளுக்கு ஏற்ற மாதிரி புதுப்புது விஷயங்களை அவர் அறிமுகப்படுத்தவேயில்லை. காரணம் பொருளாதாரம்தான். புரபசர் லால், ஜூனியர் சர்கார், பேராசிரியர் பாக்கியநாத் எம்.ஏ, ராதிகா மேடம் இப்படி மேலும் சிலர் புதுப்புது விஷயங்களைப் புகுத்தி ரசிகர்களை அப்படியே ஆச்சரியப்படுத்துவது போல இல்லாமல் அரைத்த மாவையே அரைத்துக் கொண்டிருந்ததால் தொழில் ரீதியில் அது அவர் காலத்திலேயே க்ஷீணமடைந்து விட்டது. நாங்களும் எதையும் முழுமையாகக் கற்றுக்கொள்ள முடியாமல் அவருடைய அகால மரணம்... இதையெல்லாம் பார்த்துவிட்டுத்தான் நான் என் எதிர்கால ஆசைகளை வேறு மாதிரியாக மாற்றிக் கொண்டேன்."

"நீ ஆசைபடும் விதமாக இருக்கலாம். சாருலதாவிடம் அனுசரணையாக நடந்துக்க. நீ எப்படிப்பட்ட வாழ்க்கை வாழணும்னு நினைக்கறயோ, அப்படிப்பட்ட வாழ்க்கையை அமைச்சுக் கொடுப்பாங்க." அன்புடன் தோளில் தட்டினார். அவன் எழுந்து நின்றான்.

டாக்டரிடம் விடைபெற்று இருவரும் வெளியே வந்தனர். கார் சேலம் நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தது.

"டாக்டர் என்ன சொன்னார்?"

''நீங்கள் முழுமையாக நல்ல மனோநிலையில் இருப்பதாகச் சொன்னார்.''

''அவர் அப்படிச் சொல்லியிருந்தால் அதற்கு முழுகாரணமும் நீங்கதான். நான் நிறைய மாறியிருப்பதும் எனக்கே தெரிகிறது. கிராமத்தில் எல்லோரும் என்னை அசடு, பயித்தியம் என்று சொல்லும் போது நான் ரொம்ப நாள் அப்படியிருந்திருப்பேனோ என்பது போலத் தெரிகிறது.''

''இனி நீ அப்படி நினைக்க வேண்டாம்.''

''இப்பொழுதெல்லாம் உங்களைத்தவிர வேறு எந்த நினைப்பும் எனக்கு இல்லை.''

காரின் வேகத்தில் அவள் மார்புச் சேலை நழுவிப் போயிருந்தது.

அவன் முகத்தில் ஒரு தாபம் தெரிந்தது. ஒரு கையால் அவன் முகத்தை வருடினாள்.

கார் முன்னேறிக் கொண்டிருந்தது.

கோவை சென்று மனோதத்துவ டாக்டர் சடகோபனுடைய அபிப்ராயங்களையும் கருத்துக்களையும் தெரிந்து கொண்டபின் சாருலதா ரொம்பவும் உற்சாகமாக இருந்தாள். டாக்டர் சொன்னதுபோல தன்னுடைய இடையறாத கவனிப்பு அவனுடைய இயல்புகளை வேகமாக மாற்றியிருப்பதை ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் அவள் கவனிக்கத் தவறவில்லை. தனது கட்டுப்பாடுகளைத் தளர்த்திக் கொண்டு அவனுடன் சற்று நெருக்கமாகப் பழகி அவனது உணர்வுகளைப் புரிந்துகொண்டு பழகியதுகூட ஒரு விதச் சிகிச்சை முறைதான் என்கிற மாதிரி டாக்டர் சடகோபன் சொன்னதில் உள்ளர்த்தம் அவளுக்குப் புரிந்தது.

முன்பெல்லாம் முன் அனுமதியின்றிக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைகிறவன், இப்பொழுது கதவைத் தட்டி உள்ளே வரலாமா என்று அனுமதி கேட்டுக்கொண்டு அறைக்குள் நுழைகிறான்.

முன்பெல்லாம் செய்துகொண்டிருக்கும் வேலையை அப்படியே பாதியில் விட்டுவிட்டு அவள் அருகில் வந்து நின்று சிரிப்பவன் இப்பொழுது அப்படிச் செய்வதில்லை.

அவள் அனுமதி பெற்று உள்ளே வந்து பூந்தொட்டிகளில் உள்ள பழைய பூங்கொத்துகளை அகற்றிவிட்டு புதிய கொத்துகளை வைத்து விட்டு பேசாமல் வெளியேறுகிறான்.

அமைதியான இந்த மாறுதலை அவள் ரசித்தாள்.

அன்று காலை அவள் அறைக்கு முன்னே வந்து நின்றவன்,

"சாரு மேடம், நான் உள்ளே வரலாமா"

"வாயேன்"

வந்தான்.

"நீங்க குளிக்கிற மாதிரி அப்போ ஒரு படம் போட்டுக் கொடுத்தேனே அதைத் திருப்பிக் கொடுங்களேன்."

"ஏன்? எதற்கு?"

ஆரம்பத்திலே ஓர் ஆர்வத்தில் இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாது என்று புரியாத நாட்களில் நான் செஞ்ச தப்பு அது. அதை ரொம்ப பெருந்தன்மையோட பார்த்து என் மனசு நோகக் கூடாதுன்னு வாங்கி வச்சுக்கிட்டீங்க. அப்படி அந்தப் படத்தை நான் போட்டிருக்கக் கூடாது என்று இப்போ தோணறது."

அவள் அதைப் பீரோவிலிருந்து எடுத்துக் கொடுத்தாள்.

கொஞ்சம்கூட யோசிக்காமல் அதைக் குறுக்கு நெடுக்காகக் கிழித்தான்.

அவள் பதட்டமடைந்தாள்.

"நான் மட்டுமே ரசிக்க வேண்டிய, ரசித்துப் பரவசப் படவேண்டிய விஷயங்கள், நம் வாழ்க்கையில் நிறைய உண்டு. இதை

மாதிரி படம் வரைந்து பிரபலமாக்கிக் கொள்ளக்கூடாது. நீங்களே என் கைக்கு எட்டும் தூரத்தில் நிற்கும்போது இந்த அழகை படம் போட்டு எதற்காகத் தொங்கவிட வேண்டும்.

சாருலதாவின் மனம் மகிழ்ச்சியில் துள்ளியது.

வினோத் மாறிக்கொண்டு வருகிறான் என்று சொல்லுவது தவறு. மாறிவிட்டான் என்பதுதான் உண்மை. இந்த மாறுதல் நான் எதிர்பார்த்ததைவிட மிகவேகமாக நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இனி இந்த மாறுதல் வேகத்தை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது.

வினோத் ... உன்னால்கூட இவ்வளவு அழகாகப் பேச முடியுமா? நிஜமாக நான் உன் கைக்கு எட்டும் தூரத்தில்தான் இருக்கிறேன். உன்னைச் சுப்புடு இங்கே கொண்டு வந்து விடும்போது,

'வினோத் பார்க்கத்தான் இப்படி இருக்கானே தவிர இவனுக்குள்ளே இன்னொரு மனிதன் ஒளிந்து கொண்டிருக்கிறான். அவன் கொஞ்சம் வித்தியாசமானவன். அந்த இரண்டாவது மனிதனை அவனிடமிருந்து பிரித்து வெளியே கொண்டுவந்து விட்டால் போதும். உன்னைச் சுற்றியொரு சைன்யம் போல இருப்பான். இவன் உன் அருகில் இருக்கும்வரை இந்த உலகில் இருக்கிற எந்தத் தீய சக்தியும் உன்னை நெருங்கவே முடியாது, என்றாரே.., அது நூற்றுக்கு நூறு உண்மை... என்று எண்ணிக் கொண்டவள்.

''உண்மைதான்... நீ மட்டுமே ரசிக்க வேண்டும் என்பதற்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறேன்.''

அவன் அருகில் வந்து அவனை அணைத்துக் கொண்டாள்.

'யமுனை நதிக்கரையோரத்தில் இருக்கும் பிருந்தாவனத்தில் உன் காதலன் கிருஷ்ணன் காத்துக் கொண்டிருக்கிறான். நிகுஞ்ஜப் பூக்கள் பூத்துக் குலுங்கும் அந்த மலர் தோட்டத்தில் மரங்களின் சருகுகள் விழுந்து காற்றில் ஓசை எழுப்பினால்கூட அது உன்

காலடியோசையாக இருக்குமோ என்று கண்களிலும், மனத்திலும் காதலை வழியவிட்டுக் கொண்டு காத்திருக்கிறான். விரைவாக அவனிடம் சென்று அவனது மார்பில் உள்ள மாணிக்கப் பரல்கள் பதித்த மாலை உன்னுடைய மார்பில் பதியும்படி கட்டி அணைத்து அவன் இச்சைகளைத் தீர்த்து நீயும் இன்பமடைவாயாக' – என்று பொருள் படும் ரதிசுக சாரே. கதம பிசாரே! என்று தொடங்கும் பாடல் அவள் காதுகளில் ஒலித்தது, பாம்பே ஜெயஸ்ரீயின் கர்ணாம்பிரதமான குரலில். அதன் இனிமை அவர்களுடைய காதல் வேகத்தை மேலும் அதிகப்படுத்தியது.

ஒருவரின் ஆலிங்கனத்தை மற்றவர் விடுவிக்க மனமின்றி இருந்தனர். அவளது அதரத்தில் மதுரத்தின் சுவையை ருசித்தவன் போல் அவளை அவன் முத்தமிட்டுத் தழுவிக் கொண்டிருந்தான்.

பங்களா வாசலில் ஏதோ பேச்சுக்குரல் கேட்டது. இருவரும் வெளியே வந்தனர்.

பெற்றோரைப் பார்த்தவுடன் வினோத் பரவசத்துடன் வாசலுக்கு வந்தான்.

''வருவதாக ஒருவரி எழுதியிருந்தால் கார் அனுப்பியிருப் பேனே.''

திடீரென்று இவள் சுப்புவை உடனே பார்க்கணும்னு அடம்பிடிக்க ஆரம்பிச்சுட்டா. அதான்...

அவர்களை உள்ளே அழைத்துக் கொண்டுபோய் உபசரித்தாள்.



கிரிஷ்மருது ஆரம்பமாகி விட்டது. மழைஇல்லாத மாலை நேரங்களே இல்லை. எங்கிருந்துதான் அத்தனை வேகமாக மழை மேகம் ஏற்காடு மலைச் சிகரங்களில் வந்து உட்காருமோ தெரியவில்லை. சிகரங்களையும் உயரமான தேவதாரு மரங்களையும் மறைத்துக் கொண்டு படர்ந்திருந்தன. சரிவான பள்ளத்தாக்கில்

மழைநீர் சரிந்து ஓடியது. இடி மின்னலின் ஓசை மலைப் பிராந்தியத்தையே அதிர வைத்தது.

சிவராமனும் சாருலதாவும் தனியே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். சிவராமன் மலைச்சிகரங்களையும் கொட்டும் மழையையும் கண்ணாடி ஜன்னல் வழியே பார்த்தபடி அமர்ந்திருந்தார். ஒரு பெரிய சம்பாஷனைக்குப்பின் ஏற்படும் இடைவெளி. பாதியில் ஏற்படும் மௌனம் போல் இருந்தது. அடிக்கடி ஒருவரையொருவர் நிமிர்ந்து பார்த்துவிட்டு முகத்தை கவிழ்த்துக் கொண்டனர்.

''அவன் உன்னைவிட சின்னவன் சாருலதா. அவனைப்போய் கல்யாணம் செய்துக்கப் போறேங்கறியே அது சரிப்பட்டுவருமா?''

''விவாகத்திற்கு எங்களிடையே இருக்கும் இந்த வயசு வித்தியாசம் ஒரு பிரச்னையே இல்லை சார். இது கல்யாணம் செஞ்சுக்கப் போகிற அந்த ரெண்டு பேரோட விஷயம் மட்டும்தான்.''

''நீ அவனைக் கல்யாணம் செஞ்சுக்க விரும்பறது அவனுக்குத் தெரியுமா? அவன் விருப்பத்தைக் கேட்டுட்டியா?''

''இல்லை. இனிமேதான் கேட்கணும். உங்க சம்மதமெல்லாம் தெரியாம இதை அவரிடம் பிரஸ்தாபிக்க நான் விரும்பவில்லை.''

''நீயோ அவன கல்யாணம் செஞ்சுக்க ஆசைப்படறே. ஆனா அவன் அம்மாவுக்கு அவன் இன்னும் குழந்தையாகவே இருக்கான். அவளிடம்தான் முக்கியமா அபிப்பிராயம் கேட்கணும்.''

''நீங்களோ அவரோட அம்மாவோ நினைக்கற மாதிரி அவர் இன்னும் குழந்தையில்லை. அவரை இருபத்தைந்து வயசு வாலிபனுக்கு உண்டான முழுமையான மனோவளர்ச்சியைப் பார்த்த பின்புதான் என் விருப்பத்தையே வெளியே சொல்றேன்.''

''அப்படியா! ராக்கிப்பட்டி பாலமுருகன் கோயில் சின்ன சுவாமிகள் சொன்னது சரியாப் போச்சு. நீங்க கவலையே

படவேண்டாம். பாலமுருகன் எல்லா வாலிபர்களையும் போல அவனை மாற்றிடுவான் என்று ஒரு வருஷத்துக்கு முன்னால் அவனைக் கொண்டு வந்து காட்டினபோது சொன்னார். இப்போ அவன் முழுமையா மாறிவிட்டான் என்று கூறுகிறாய். கேட்கவே சந்தோஷமா இருக்கு. அதைவிட நீ அவனைக் கல்யாணம் செய்துக்க ஆசைப்படறேங்கறதைக் கேட்கறபோது இன்னும் சந்தோஷம் அதிகமாகிறது. ஆனாலும் அவனோட அம்மாவிடம் அபிப்பிராயம் கேட்க வேண்டாமா?"

"அவங்களோட அபிப்பிராயம் எப்படி ஸார் இருக்கும்?. உங்களால் யூகிக்க முடியுமா?"

"இதில் ஊகங்கள் சரிபட்டு வராது. நீ இதில் ரொம்ப தீவிரமா இருக்கியா ?"

"என்னோட வாழ்க்கைப் பிரச்னை ஸார். அதன் சாதக பாதகங்கள பத்தி தெரிஞ்சுகிட்டேதான் பேசறேன். வினோத்தைக் கல்யாணம் செய்துகொள்ள நான் எடுத்த முடிவே தீவிரமான முடிவுதான். இதை நான் சாதாரணமா போகிற போக்கில் எடுத்த முடிவா இருக்க முடியாது. இருக்கவும் கூடாது. இல்லையா?"

"ரொம்ப நல்லது. அவனையொரு திடகாத்திரமான மனோ நிலையுள்ள வாலிபனாக மாற்ற நீ நிறைய முயற்சிகள் செய்து வெற்றியும் பெற்றிருக்கிறாய். இரண்டும்கெட்டான் நிலையில் அவன் இங்கே பல தவறுகள் செய்திருக்கலாம். அதையெல்லாம் பொருட்படுத்தாமல் ஒரு டாக்டர் போல, தோழிபோல, ஆசிரியை போல மாறி மாறி இந்த நிலைக்குக் கொண்டுவந்திருக்கிறாய். உனக்கு இருக்கும் அழகுக்கும் செல்வாக்கிற்கும் நீ நினைத்தால் மிகப்பெரிய அந்தஸ்தில் உள்ள வாலிபனைக் கல்யாணம் செய்து கொள்ளமுடியும். அந்த முடிவில் உன்னை யாருமே தடுக்க முடியாது."

"அப்படியெல்லாம் பேசாதீர்கள். என் செல்வாக்கைப்பற்றி நான் எப்பொழுதுமே அகந்தை கொள்வதேயில்லை. இந்தச் செல்வாக்கும்

அந்தஸ்த்தும் நிச்சயமாக நான் உழைத்து எனக்கு வந்ததில்லை. யாரோ உழைத்தார்கள். பெற்றோர்கள் பாதுகாத்து சேர்த்துவைத்தார்கள். அவர்களுக்குப்பின் அந்தச் சுகபோகங்களை நான் அனுபவிக்கிறேன். அவ்வளவுதான். இவைகளைக் கழித்துவிட்டுப் பார்த்தால் சாருலதா ஒரு சாதாரண பெண்."

காற்று வேகமாக அடித்தபோது உயரமான தைலமரங்கள் கிளைகளை மடக்கிக் கொண்டு ஆடின.

"நான் வினோத்திற்காக விசேஷமாக எதுவும் செய்யவில்லை. அவரிடம் இருக்கும் குண இயல்புகளைத் தெரிந்து கொண்டேன். அவர் போக்கிலேயே விட்டு அவரை மாற்றமுயன்றேன். அவரது செய்கைகளை இங்கே யாரும் விமர்சிக்க அனுமதிக்கவில்லை. அவர் இருக்கும் இந்த இடம் அவருக்குப் பாதுகாப்பான இடம். எல்லோரும் அன்பு செலுத்துமிடம் என்பதை முதலில் உணர வைத்தேன். உண்மையில் பார்க்கப்போனால் அவரை ஒரேயொரு முறைதான் கோவையில் இருக்கும் மனோதத்துவ டாக்டர் சடகோபனிடம் அழைத்துப் போனேன். அவரும் அவரது பேச்சு, நடவடிக்கைகள் மற்றும் செய்கைகளைப் பார்த்துப் பிரமித்துப்போய் அவர் நன்றாகவே இருக்கிறார் என்று கூறிவிட்டார்" – என்றாள்.

சாருலதா பேசுவதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த சிவராமன்,

"எல்லாம் சரிதான். நீ இன்னொரு விஷயத்தில் மிக கவனமாக இருக்க வேண்டும். வினோத்தின் தாயாரிடம் திருமணத்திற்காக அனுமதி கேட்கும்போது ரொம்ப ஜாக்கிரதையாகப் பேசவேண்டும். உங்கள் இருவருக்கும் இடையே உள்ள வயது வித்தியாசம் பற்றிப் பிரஸ்தாபமே வரக்கூடாது. ஒருவேளை அவள் இதைப்பற்றிப் பேச்சை ஆரம்பித்தால் சாதுர்யமாகப் பேச்சைத் திசை திருப்பிவிடு அல்லது கேள்வியைக் காதில் வாங்கிக் கொள்ளாத மாதிரி மவுனமாகிவிடு. ஊருக்குப் போனபின் அவளிடம் இதைப்பற்றி நான் பேசி அவளைச் சமாதானப்படுத்திவிடுகிறேன், மற்றொரு விஷயம், வினோத்தின்

சகோதரி சேலத்தில் இருக்கிறாள். அவளும் என் பெண்தான் என்றாலும் அவள் இதில் மூக்கை நுழைக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். ஏனென்றால் வினோத்தின் தாயார் எதெற்கெடுத்தாலும் தன் மூத்த பெண்ணின் அபிப்பிராயத்தைக் கேட்பாள்'' – என்றவர் சிறுநேர இடைவெளிக்குப் பின் முதலில் வினோத்தின் மனநிலையைத் தெரிந்துகொண்டு அவனை விட்டே தாயாரிடம் கேட்கும்படி செய். அது நிச்சயமாக நல்ல பலனைத் தரும். அவன் ஆசை எதுவானாலும் அதற்குக் குறுக்கே நிற்க மாட்டாள். அத்தனை அபிமானம் அவன் மேல். உன்னால் இவ்விஷயத்தில் அவனைத் தூண்டிவிட முடியுமா?''

''நிச்சயமாக முடியும்.''

''அப்படியானால் உன் ஆசையும் நிறைவேறின மாதிரிதான். எனது இதயபூர்வமான ஆசிகளை இப்பொழுதே சொல்லி விடுகிறேன்.''

சாருலதா சிவராமனை இரண்டு கரம் கூப்பி வணங்கினாள்.



எல்லாவற்றிற்கும் மனிதனின் எண்ணமே காரணம். எண்ணம் தீமையாக இருந்தால் உயிர் சக்தியில் உள்ள வீரியம் மாசுபடுகிறது. இதனால்தான் 'நினைவுகள் நல்லது வேண்டும்' என்று பாரதி பாடினான். நல்ல எண்ணங்கள் உற்பத்தியாகும் உள்ளத்தைக் கோயில் என்றார்கள் நம்ஆழ்வார்கள்.

என் உள்ளத்தில் இருள் என்ற தீய எண்ணம் படியாமல் இருக்க ஞான விளக்கை ஏற்றிவை என்றார் தாயுமானவர்.

*விளக்கைப் பிளந்த*
*விளக்கினை ஏற்றி*
*விளக்கினுக்குள்ளே*
*விக்கினைத் தூண்டி....*

என்று திருமூலர் திருமந்திரத்தில் பேசுகிறார். எல்லாவற்றிற்கும் மாசுபடாத எண்ணம்தான் காரணம். உனது எண்ணம் தூய்மையானது.

ஒரு சாதாரண, வினோத் என்கிற ஏழை வாலிபனை உன் அரவணைப்பில் உயர்த்த வேண்டும் என்று நீ நினைக்கிறாய், ஆசைப்படுகிறாய். ஒன்றுக்கும் உதவாமல் போய்விடுவானோ என்று நான் அவனைப் பற்றிக் கவலைப்பட்டேன். நன்றாகப் படிக்கிற பையன் அவன். அவனை என்னால் சரியாகப் படிக்கவைக்க முடியவில்லை. என் அண்ணாதான் அவனது ஒவ்வொரு ஆசையையும் நிறைவேற்றி வைத்தார். அவனுடைய விருப்பம் நன்றாகப் படித்துவிட்டு ஒரு நல்ல உத்தியோகத்திற்குப் போய், அப்பா அம்மாவைக் காப்பாற்ற வேண்டும் என்பதுதான். ஆனால் என் அண்ணாவின் ஆசை வேறு மாதிரியாக இருந்தது. அவனைத் தன்னோட வாரிசு மாதிரியே அவர் தயார் செய்து விட்டார். அதாலேயே அவன் விஷயத்தில் எங்களால் தலையிட முடியவில்லை. அவனது ஆரம்பகால விருப்பங்கள் உன் மூலமாக நிறைவேற போகிறது!

"சுப்புடு அவனை உன்னிடம் சேர்ப்பித்துவிட்டு எங்களிடமும் சொல்லிவிட்டுத்தான் போனார். அன்றிலிருந்தே எங்கள் கவலை வேறுமாதிரியாக மாறிவிட்டது. சுப்புடு சேர்த்துவிட்டு வந்த இடத்தில் இவன் நல்ல பெயர் எடுக்க வேண்டுமே, அங்கே உள்ளவர்களிடம் சரியாக நடந்துகொள்ள வேண்டுமே என்று ஓயாது.கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம்... ஈஸ்வரகிருபையில் பிழைக்கப் போன இடத்தில் ஓர் உன்னதமான நிலைக்குத் தன்னை உயர்த்திக் கொண்டிருக்கிறான். அந்த உன்னதம் அவனுக்கு உன்னால் வந்திருக்கிறது. மேலும் வரப்போகிறது ."

சிவராமன் எழுந்தார்.

சாருலதாவின் பர்னிச்சர் மார்ட் சேமிப்புக் கிடங்கில் இடங்கொள்ளாமல் கம்ப்யூட்டர் மேஜைகள் தயாரிக்கப்பட்டு அடுக்கப்பட்டிருந்தன. கிடங்குக்கு வெளியே நின்ற சில லாரிகளில் தயார் செய்யப்பட்ட கம்ப்யூட்டர் மேஜைகள் "லோடாகிக்" கொண்டிருந்தன.

அவ்வழியே காரில் போன தேவதாஸ் இதைப் பார்த்தான். ஆத்திரத்தில் அவன் உடம்பு உஷ்ணமானது. அருகில் அமர்ந்திருந்த பிரபாகரைப் பார்த்தான்.

தேவதாஸ் ஏற்கனவே சாருலதாவின் கம்பெனியில் பொறுப்புள்ள இடத்தில் இருந்தான். பிறகு அவளை ஏமாற்றி ஏராளமான பணத்தைக் கையாடல் செய்துவிட்டான். இந்த உண்மை தெரிந்தபோது அவன் கணக்கை ஒரே நாளில் தீர்த்து அவனை வெளியே அனுப்பிவிட்டாள். வெளியேற்றப்பட்ட தேவதாஸ் வேறு கம்பெனியொன்றைத் தொடங்கினான். அது சாருலதாவின் மார்டன் பர்னிச்சர் மார்ட்டுடன் போட்டிபோட முடியாமல் கொஞ்ச நாளில் இழுத்து மூடும்படியாகிவிட்டது. வியாபாரத்தில் சாருலதாவுடன் மோத முடியாமல் தோற்றுப்போனவன் அவளுடைய எதிரி யார் என்று தேடிப்பிடிப்பதில் முனைப்புடன் இருந்து, கடைசியில் பிரபாகரைத் தேடிப் பிடித்தான். அவன் மூலமாக அவளுக்குத் தொல்லைகள் கொடுக்க ஆரம்பித்தான்.

பங்களா வாங்கித் தருவதாகக் கூறி அவளிடமிருந்து பதினைந்து லட்சத்துடன் தலைமறைவாகி விட்டவன் மேல் போலீசில் புகார் கொடுத்து அவனைப் போலீஸார் கைது செய்து சிறையில் அடைத்தபோது தேவதாஸ் அவனை ஜாமினில் வெளியே கொண்டு வந்தான்.

போலீஸை கையில் போட்டுக்கொண்டு விசாரணை வழக்கு எல்லாவற்றையும் வேண்டுமென்றே காலதாமதப்படுத்திக் கொண்டிருந்தான்.

ஏற்காடு பண்ணை பங்களாவில் சாருலதா மட்டும் தனியே இருக்கிறாள். அவள் துணைக்கு யாருமில்லை. அவளை மிரட்டி என்ன வேண்டுமானாலும் சாதித்துக் கொள்ளலாம் என்று இருவரும் திட்டம் போட்டனர். ஆனால், இந்தத் திட்டம் வினோத்தின் வருகையால் சிதைந்துபோய் விட்டது.

ஒரு மந்திரவாதியிடம் சென்று இவளைத் தீர்த்துக்கட்ட விஷப்பாம்பை ஏவிவிட்டுப் பார்த்தனர். டெலிபோனில் பணம் கேட்டுக் கெடுபிடி செய்தனர். எல்லாம் வினோத்தின் குறுக்கீட்டினால் தோல்வி அடைந்தது.

வர்மக் கலையில் நுணுக்கங்கள் தெரிந்த வினோத்தை அவர்களால் ஒன்றுமே செய்யமுடியவில்லை. ஒவ்வொரு முயற்சியிலும் அவர்கள் தோல்வியே அடைந்தனர். இதன் கடைசி கட்டமாகத்தான் மற்றொரு முயற்சியில் ஈடுபட்டனர்

அவனைப் போலவே வர்மக்கலையில் தேர்ச்சி பெற்ற ஒருவனால்தான் அவனைச் சமாளிக்க முடியும் என்ற முடிவுடன் அப்படிப்பட்ட ஆளைத் தேடினர்.

* * *

காந்தராஜ் என்ற அந்த வாலிபனைப் பற்றிக் கேள்விப்பட்டு எப்படியோ அவனைக் கண்டுபிடித்தும் விட்டனர். அவனோ வர்மக் கலையை, அழிவுக்கோ, அல்லது பிறரை அழிக்க வேண்டுமென்ற அல்பமான காரியங்களுக்கோ நிச்சயமாகப் பயன்படுத்தமாட்டேன் என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டான். ஆனால், அவர்களோ மிக நல்லவர்கள்போலத் தங்களைக் காட்டிக்கொண்டதோடு ஒரு பொது நன்மைக்காகத்தான் இந்த உதவியை நாடுவதாகவும் எதிரி ரொம்பவும் மோசமானவன் என்றும் அவனுடைய அட்டகாசம் ஊரில் பலரை அமைதி இழக்க வைத்திருப்பதாகவும் சட்டத்தின் முன் அவனைத் தண்டிக்க முடியாமல் - அத்தனை வலிமையானவன். ஒரு பெரிய மோசடிக் கும்பலின் தலைவன். பிறர் சொத்துக்களை அபகரிப்பவன். அரசாங்கம், போலீஸ் எல்லாவற்றையும் ஏமாற்றுகிறவன். யாருமே தன்னை நெருங்க முடியாது என்று சவால் விடுகிறான். அப்படிப்பட்ட மனிதனைச் சும்மா விட்டுவைக்கலாமா – என்ற போது? அப்படிப்பட்டவனை நிச்சயம் சந்தித்தே ஆகவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டான் காந்தராஜ். என்றாலும், அதிலும் ஒரு நிபந்தனையைச் சொருகி சம்மதித்தான்.

எதிரியின் உயிருக்கு எவ்வித ஆபத்தும் விளைவிக்காமல் எதிரிக்குப் பாடம் புகட்டுமளவு மட்டும் தாக்குதல் நடத்திவிட்டு அவ்ன் தவறை உணரவைத்துப் பின்பு வர்மத்தாக்குதலிலிருந்து அவனை இளகவைத்துக் குணப்படுத்திவிட வேண்டும் என்று தன் மனதில் ரகசியமாகச் செய்து வைத்திருந்த முடிவை வெளியே சொல்லாமல் அவர்களுடன் விணோத்தைச் சந்திக்க காந்தராஜ் புறப்பட்டுவிட்டான்.



ஏற்காடு மலைச்சரிவில் சாருலதாவுடன் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தான் விணோத் .

சிவராமன் வந்து விட்டுப் போனதிலிருந்து அவள் மனதில் ஒரு புதிய நெருடல் இருந்தது. 'நீ அவனைக் கல்யாணம் செஞ்சுக்க ஆசைப்படறது அவனுக்குத் தெரியுமா? அவன் விருப்பத்தை கேட்டுவிட்டாயா?' என்று கூறி அவன் அபிப்பிராயத்தை வெளிப்படையாகத் தெரிந்துகொள்ளும்படி கூறியிருந்தார்.

இதுவரை அதுபற்றி அவனிடம் வெளிப்படையாகக் கேட்கவேயில்லை. அவனோ, சாருலதாவையன்றித் தன்னை வேறு யாருமே , அதேபோல அவளைத் தன்னையன்றி வேறு யாருமே தொடக்கூடாது என்று கூறியிருந்தான். அன்று இரவு அவளைத் தழுவி முழுமையாகத் தன்னுள் ஐக்கியப்படுத்திக் கொண்ட மோக நிலையில் உன்னை விட்டு இனி என்னால் ஒரு நாள் கூடப் பிரியமுடியாது. எனக்கு நீ முழுமையாக இப்பொழுது இருக்கிற மாதிரியே எப்பொழுதும் வேண்டும் என்றானே அப்படிப்பட்ட மனோநிலையில்தான் எப்பொழுதும் இருக்கிறானா. அப்படியானால் விவாகத்தைப் பற்றி அவரிடம் கேட்டுவிட வேண்டும் என்ற தீர்மானத்துடன் இந்தத் தனிமையை ரசித்துக் கொண்டிருந்தாள்.

வானம் மிக அருகில் இருப்பது போலத் தோன்றியது. மேகக் கூட்டமொன்று தலைக்குமேல் அவர்களைத் தாண்டி ஊர்ந்தது.

"விணோத் உங்களிடம் ஒன்று கேட்கலாமா?"

"கேளுங்கள்"

"இந்த மரியாதைகளைத் தயவு செய்து நிறுத்திக் கொள்ளுங்களேன். இந்த மரியாதை நம்மை அன்னியப் படுத்துவது போல இல்லையா ?"

"நாம் என்றுமே சினேகிதர்கள்தான்"

"அந்தச் சினேகிதத்துக்கு மேல் நாம் போகவேண்டாமா?"

"போகலாமே. அந்த எல்லைகளுக்கு மேல் நாம் பலமுறை போயிருக்கிறோமே. இதோ இந்த அணைப்பு. இதோ இந்த அதரத்தின் மதுரமான முத்தங்கள்... நேற்றுகூட....."

இந்த வார்த்தையால் அவள் உணர்ச்சி வசப்பட்டாள்.

"இந்தச் சினேகத்தை நாம் உறவாக்கிக் கொள்ளவேண்டும் வினோத்"

"அப்பாவும் சொன்னார்".

"அப்பா சொல்லிவிட்டாரா? நானே சொல்ல வேண்டுமென்றிருந் தேன். உங்களுக்கும் இஷ்டம்தானே."

அவன் என்ன பதில் சொல்லப் போகிறான் என்பதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தபோதுதான் அது நடந்தது.

சிவராமன் மூலமாக வினோத்திற்கு அந்தச் செய்தி போய்விட்டது. இனி வினோத்தின் பதில்தான் முக்கியம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தபோதுதான் அது நடந்தது.

வாழ்க்கையின் ஒரு முக்கியமான கட்டத்தில் நிற்கும் தருணத்தில் வினோத்தின் பதிலுக்காகக் காத்திருந்த நிமிஷங்களில்தான் அது நடந்தது.

பின்னால் யாரோ வந்து நிற்பதும், உடம்பில் நிழல் படிவதும் உணர்ந்து திரும்பிப் பார்ப்பதற்குள் அது நடந்துவிட்டது.

பின்னால் மிக நெருக்கமாக வந்து நின்ற யாரோ வினோத்தைத் தாக்கினான். தாக்கிய வேகத்தில் ஒரு பாறையில் சாருலதாவுடன் நெருக்கமாக உட்கார்ந்திருந்த அவன் மலைப்பாறையிலிருந்து கீழே வேகமாக விழுந்து சரிவில் உருண்டான்.

சாருலதா பதறிப்போனாள்.

தூரத்தில் மலைச்சரிவின் கரடுமுரடான சாலையில் வெண்மை நிற மாருதி வேன் ஒன்று நின்றது. அதன் அருகில் இரண்டுபேர் நின்றனர் . வினோத் தாக்கப்பட்டு மலைச் சரிவில் உருண்டதைப் பார்த்த அவர்கள் இருவரும் வேகமாகச் சாருலதாவை நோக்கி வந்தனர்.

யார் தன்னைப் பின் நின்று தாக்கியது என்பதைத் தெரிந்து கொள்ள கீழே விழுந்த வினோத் முயன்று, மெதுவாக முகத்தைத் திருப்பியபோது தன்னைத் தாக்கியவனின் கால்கள் அவன் முகத்திற்கு மிக அருகில் இருந்தது. தாக்கியவனின் முகத்தை நிமிர்ந்து பார்க்கக்கூட வினோத் அவகாசம் எடுத்துக் கொள்ளவில்லை. அடுத்த வினாடி தன் முகத்திற்கு மிக அருகில் இருக்கும் காந்தராஜின் முழங்கால் மூட்டுக்கும் பாதத்திற்கும் நடுவே முழங்கால் நடுவில் குதிரைமுகத்திற்குக் கொஞ்சம் மேலே ஒரு விரலால் சுண்டி இழுத்தான். இந்தக் கொம்பேறி வர்மத் தாக்குதலால் காந்தராஜின் உடம்பில் வலி விஷம்போலப் பரவியது. கண் இமைக்கும் நேரத்தில் வியர்வை ஆறாகக் கொட்டியது. உடல் திடீரென்று தளர்ந்து அவன் உடம்பில் பலமே இல்லாதமாதிரி சுருண்டு விழுந்தான்.

தன்னைக் கீழே தள்ளி தாக்கவந்தவனைக் கொம்பேறி வர்மத்தினால் வினோத் முடக்கியபோது வலி தாங்காமல் தரையில் படுத்து உருண்டான். தன்னைச் செயலிழக்க வைத்தவன் சாதாரணமானவன் அல்ல என்பதைப் புரிந்து கொண்ட காந்தராஜ் தாங்க முடியாத ரணவேதனையுடன் வினோத்தைப் பார்த்தான்.

தன்னைத் தாக்கியவன் யார் என்று தெரிந்து கொள்ளக்கூட விரும்பாத வினோத் இரண்டு முரடர்கள் சாருலதாவை இழுத்துக் கொண்டுபோய் காரில் ஏற்ற முயன்றவர்கள் அருகில்போய் நின்றான். ''மரியாதையா அவளை விட்டுவிட்டு உங்க உயிரைக் காப்பாற்றிக் கொண்டு போயிடுங்க. உங்களுக்கு உயிர்ப்பிச்சை தருகிறேன். நான் இந்தத் தடவை உங்களைத் தாக்கினால் நீங்கள் உயிர் பிழைக்கமாட்டீர்கள். அல்லது வாழ்நாள் பூராவும் படுக்கையில் முடங்கிக் கிடக்க வேண்டியது தான்....''

சாருலதாவின் கையைப் பிடித்துக் கொண்டிருந்தவர்களை அனாயசமாக இழுத்துத் தாக்கியபோது அவர்கள் மலைப்பாதை இடுக் கொன்றில் அடிப்பட்டு விழுந்தார்கள். சாருலதாவை விடுவித்து விட்டுப் பிரபாகர் அருகில் வந்து நின்றான்.

''ஏண்டா நாயே ! உனக்கு சுயமா சண்டை போடத் தெரியாது. அடிச்சா ஒரு அடிகூட தாங்கமாட்டே. உன்னை அடிச்சா அது எனக்குத்தான் அவமானம். அதோ, நீ என்னைத் தாக்கக் கூட்டிகிட்டு வந்தியே புதிய தாதா. அவன் அந்த இடத்தைவிட்டு எழுந்திருக்கவே இன்னும் இரண்டு மணி நேரமாகும். அவனைத் தூக்கிகிட்டு நேரா சுடுகாட்டுக்கே போயிடு. ஏன்னா அவன் இன்னும் மூணு நாள் தான் உயிரோட இருப்பான்'' – என்று அவன் பேசிக்கொண்டிருக்கும் போதே பிரபாகர் அவனைத் தாக்க வந்தான்.

''வேண்டாம்டா. அனாவசியமா அடிபட்டு நடுரோட்லே சாவாதே. நான் என்னோட வர்மக்கலையைப் பயன்படுத்தி யாரையும் அதிகமா துன்பப்படுத்தமாட்டேன். என்னோட தற்காப்புக்கு மட்டும் தான் உபயோகப்படுத்துவேன். இதை என் பலவீனமா நெனைச்சுகிட்டுச் சண்டைக்கு வந்தேன்னு வச்சுக்க, உன் உடம்பிலே உயிர் மட்டும்தான் இருக்கும். பிறபட்டு நீ எதுக்குமே உபயோகப்படாத ஜடமா போயிடுவே...'' அவன் பிரபாகரிடம் பேசிக்

கொண்டிருக்கும் போதே மிக அருகில் ''சுப்புசாமி... சுப்புசாமி'' என்ற தீனமான குரல் கேட்டது. வியப்புடன் திரும்பிப் பார்த்தான். சுப்புசாமி என்கிற அவனது பூர்வாஸ்ரமப் பெயர் அவனுடன் சிறுவயதிலிருந்து நெருங்கிப் பழகிய சில நண்பர்களுக்கு மட்டுமே தெரியும்..

''சுப்பு சாமி... குருவே... என்னைத் தெரியலயா... நான்தான்.... காந்தராஜ்.... குருவே என்னை மன்னிச்சிடுங்க.'' பாறைகளைக் கடந்து மண்டியிட்டுக் கால்களைத் தரையில் இழுத்து இழுத்து ஊர்ந்து வந்த காந்தராஜ் வினோத்தின் கால்களைப் பிடித்துக்கொண்டான்.

''என்னை மன்னிச்சுடுங்க. யாருன்னு தெரியாம இந்தப் பிரபாகர் சொன்னதைக் கேட்டுத் தெரியாம குருதுரோகம் பண்ணிட்டேன்''

வினோத் அதிர்ந்துபோனான்.

''டேய் காந்து நீயா.. அடப்பாவி....''

''நான் பாவிதான் சுப்பு... தெரியாம தப்பு நடந்து போச்சு...'' அவன் எழுந்திருக்க முடியாமல் அதிகம் பேச முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்தான்.

''எல்லாத்துக்கும் இவன்தான் காரணம்... ஏதேதோ பொய் சொல்லி என்னை இங்கே அழைச்சுகிட்டு வந்துட்டான். உன்னை நேருக்கு நேரா பார்த்திருந்தா இந்தத் தப்பை நான் சத்தியமா செஞ்சிருக்கமாட்டேன் ...'' அவன் எழுந்திருக்க முடியாமல் தரையில் நெளிந்தான். ஓரளவு நிலைமையைப் புரிந்துகொண்ட வினோத் பாறைகளுக்கு நடுவிலும், மழைநீர் கசிவுகள் ஓடும் நீர் தாரை ஓரமாகவும் வளர்ந்திருக்கும் வல்லாரைச் செடியைப் பிடுங்கி பாறையில் வைத்து நசுக்கி ''சாறு'' பிழிந்து அவனுக்குப் பற்றுப் போட்டான். அவன் வாயிலும் பிழிந்தான். வேகமாகச் செயல்பட்டு வர்மத்தை இளக வைத்தான். அவனைத் தூக்கி நிறுத்தி தன்னுடன் சாய்த்துக் கொண்டான்.



காந்தராஜும் வினோத்தும் சேர்ந்து போவதைப் பார்த்த பிரபாகர் தனது கடைசி முயற்சியும் தோல்வி அடைந்து விட்டதை உணர்ந்தான்.

பாறையை விட்டு கீழே வந்தார்கள்.

''வேண்டாம்டா, என் குருவோட அனாவசியமா மோதி அழிஞ்சு போகாதீங்கடா. எதாக இருந்தாலும் சமாதானமா போயிடுங்க. அவரோட சக்தி தெரியாம விளையாடாதீங்க. நீங்க இப்படி நிக்கும் போதே உங்களைச் சுற்றி நெருப்பை மூட்டி உங்களை நின்ன இடத்திலேயே சாம்பலாக்கிடுவாரு... யார் உங்கள ஏவினது அவன்பேர் என்ன தேவதாஸா. அந்த மடையன்கிட்டேயும் போய் சொல்லுங்க போங்க...''

வினோத், காந்தராஜ், சாருலதா மூவரும் மலைப் பாதையில் போவதைப் பிரபாகரும் அவனது ஆட்களும் தோல்வி பயத்துடன் பார்த்தபடி நின்றனர்.

# 14

வினோத்தைச் சாருலதா கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்படுகிறாள் என்பதை மனைவியிடம் சொல்லுவதற்கான நல்ல சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் சிவராமன்.

சாருவின் விருப்பம் அவரைப் பொறுத்தவரையில் அதீதமாகப் படவில்லை. இம்மாதிரி வயதில் மூத்த பெண்களை மணந்த பலபேரை அவருக்குத் தெரியும். எனவே அவர் இதைப் பொருட்படுத்த வேயில்லை. ஆனால் மனைவி நாகலெட்சுமி கொஞ்சம் கர்னாடகம். எதற்கும் சாஸ்திரம் சம்பிரதாயம் என்று பார்ப்பாள். இதில் அவளைச் சமாதானப்படுத்திச் சம்மதிக்க வைப்பது ரொம்ப கஷ்டம். அவள் மனோபாவம் போலவே பெண் கனகாம்பரம், அம்மா சொல்லுவதை

அப்படியே ஆதரிப்பவள். லோகாயதமாக எதிலும் ஒத்துப்போகாத குணம். கனகாம்பரம் குறுக்கே புகுந்து காரியத்தைக் கெடுக்காமல் இருக்கவேண்டுமே என்ற பயமும் அவர் மனதில் இருந்தது. எனினும் இதைப்பற்றி இனியும் தாமதம் செய்யக் கூடாது என்று அவர் ஒரு தீர்மானத்திற்கு வந்தபோது திடீரென்று திருச்சியிலிருந்து நாகலெட்சுமியின் அண்ணன் தன் மகள் சுதாவை அழைத்துக்கொண்டு வந்து நின்றதும் ஒரு காரணம்.

வினோத் உடம்பு சரியாகி இன்று எல்லோரையும் போல இருக்கிறான். பார்க்க அழகாக இருக்கிறான். ஏற்காட்டில் ஒரு பெரிய எஸ்டேட்டில் நல்ல நிலையில் இருக்கிறான் என்பதைக் கேள்விப்பட்டு அவசர அவசரமாகச் சுதாவை வினோத்திற்குக் கொடுக்க வேண்டும் என்ற முடிவுடன் சகோதரியைப் பார்த்துச் சம்மந்தம் பேச வந்துவிட்டார். அவர் அவசரமாக வந்து இறங்கியிருக்கும் நோக்கத்தைத் தெரிந்துகொண்ட சிவராமன் இனி தாமதிக்கும் ஒவ்வொரு நாளும் அவனையே மணக்க வேண்டும் என்ற முடிவுடன் இருக்கும் சாருலதாவின் வாழ்வில் சிக்கலை உண்டாக்கிவிடும் என்பதை உணர்ந்தவர், மனைவியைத் தனியே அழைத்துப் போய் பேச ஆரம்பித்தார்.



"உன் மகனுக்குப் பெரிய இடத்திலிருந்து சம்மந்தம் ஒண்ணு வந்து காத்துண்டு இருக்கு. இப்போ போய் உன் அண்ணன் தன் பெண்ணை அழைச்சுண்டு வந்து இருக்காரே. அவருக்கு என்ன பதில் சொல்லப் போறே?"

"என் சுப்புவுக்குப் பெரிய இடத்திலிருந்து சம்மந்தமா! யார் அது எனக்கே தெரியாம?"

"அதை அப்புறமா தெரிஞ்சுக்கலாம். இப்போ உன் அண்ணாவுக்கு என்ன பதில் சொல்லப்போறே. அது தெரிஞ்சாத்தான்

நான் சொல்ற அந்தப் பெரிய இடத்துச் சம்மந்தம் எது என்று நான் சொல்வேன்.''

''அண்ணா வந்தா வந்துட்டுப் போகட்டும். அவரோட பெண் சுதாவுக்கு நான் என் சுப்புவைக் கல்யாணம் செய்து வைக்க சம்மதிக்கவேமாட்டேன். அவனுக்கு உடம்பு மனம் எதுவுமே சரியா யில்லாம இருந்தப்ப வாய் வார்த்தைக்குக்கூட என்ன உதவி வேணும், என்ன செய்யப் போறே என்று கேட்கல. பெரிய மிராஸ்தார் தோப்பும் துரவும் நல்ல செல்வாக்கிலே இருந்தும்கூட, இந்த ஏழை சகோதரி அவர் கண்ணிலே படாம போயிட்டேன். மத்தவால்லாம் பேசறமாதிரி அவரும் மன்னியும் கூடத்தான் என் சுப்புவைக் கேலி பண்ணினார்கள். ''உன் பிள்ளை சித்தசுவாதீனமில்லாம தெருத் தெருவா அலையறானாமே. அவனை எப்படி ஆத்திலே வச்சிண்டு சமாளிக்கற? பேசாம குணசீலத்திலே கொண்டு போய் விட்டுருன்னு நாக்கிலே நரம்பில்லாம பேசினவா தானே அவர்கள். இப்போ, என்னோட ''செல்லம்'' நன்னா தேறி மத்தவா மாதிரி ஆயிட்டான். ஒரு பெரிய எஸ்டேட்ல போய் சேர்ந்துட்டான். பிரபலமான பர்னிச்சர் மார்ட் நடத்தறவா கிட்டே உதவியாளரா இருக்கான். அப்படின்னு கேள்விப்பட்டவுடனே அவசரம் அவசரமா பெண்ணையும் கூட்டிண்டு வந்து நிக்கறார். அவர் கேட்டா நான் உடனே சம்மதம் சொல்லிடுவேனா... நாம ஏழையா இருக்கலாம். தப்பில்லே, ஆனா ரோஸம் கெட்டுப்போயிடக்கூடாது. எனக்கும் ரோஸம் இருக்கு. அது போகட்டும். நீங்க ஏதோ சொல்ல வந்தேளே, அதைச் சொல்லுங்கோ.''

''சரி, சுதா வேண்டாம்னு நீயே முடிவு செஞ்சுட்டே. வேற என்ன யோஜனை வச்சிருக்கே. அவனுக்கு இந்த நிலையிலேயே ஒரு நல்ல பெண்ணா பார்த்துக் கல்யாணம் செஞ்சு வச்சுட்டா நல்லது இல்லையா?''

''நீங்க சொல்றது சரிதான். என் பிள்ளையை நாலுபேர் முன்னால பிள்ளையா மாற்றினாளே. அவளைக் கேட்காமல் ஒரு வார்த்தைகூட

நான் பேசமாட்டேன். வேலைக்கு மட்டுமில்லே அவனையே அந்த மகராஜியிடம் ஒப்படைச்சுட்டேன். சுப்புவை அவள் எத்தனை சிரத்தையா பார்த்துக்கறா. அவ அந்தஸ்த்து என்ன, செல்வாக்கு என்ன? அழகு என்ன!.... எல்லாம் நாம செஞ்ச பூஜையோட பலன். தெய்வம் மாதிரி அவளை நமக்கு சுப்புடு மூலமா அடையாளம் காட்டியிருக்கு. கொஞ்சமா பேதளிச்சுப் போயிருந்த அவனை எல்லாருமா சேர்ந்து ஒரேயடியா பயித்தியமாக்கி விடுவாளோன்னு நான் பயந்தது எனக்குத்தான் தெரியும்.'' இப்படிச் சொன்னபோது நாக லெட்சுமியின் குரல் அடைபட்டு தழுதழுத்தது. கண்களில் கண்ணீர் கசிந்தது. சாருலதாவைப் பற்றிப் பேசும்போது அதிகம் உணர்ச்சி வசப்பட்டுப் போனாள்.

சிவராமன் மனம்கூட ரொம்பவும் நெகிழ்ந்தது. அவருக்கும் தெரியும் வினோத்துக்கு அவள் செய்த உதவி மகத்தானது என்று மனைவியின் எண்ணவோட்டங்கள் எப்படியிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றுதான் பேச்சை ஆரம்பித்தார். அவர் எதிர்பார்த்ததை விட அதிகமாகவே சாருலதா நாகலெட்சுமியின் மனதில் ஒரு அற்புதமான இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறாள் என்பது தெரிந்தது – அவர் மனம் சந்தோஷப்பட்டது. இந்தக் கனிவான சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள மெதுவாகப் பேச்சின் திசையைத் திருப்பினார்.

''எதற்கும் பயன்படாமல் போயிடுவானோ என்று நாம் பயந்து கொண்டிருந்தபோது தெய்வம் மாதிரி வந்து நம் பையனை மனிதனாக்கியவளுக்கு நாம் என்ன ஈடு செய்ய முடியும்? நாம் அவளுக்கு ஏதாவது செய்ய வேண்டாமா'' நாகா -

''நிச்சயமா செய்யலாம். செய்ய வேண்டும். இந்த உடம்பையே செருப்பா தைச்சு போட்டாக்கூட தகும். இந்த ஏழையிடம் அந்தக் கோடீஸ்வரிக்குக் கொடுக்க என்ன இருக்கு?''

"கொஞ்சம் யோஜனை செஞ்சுபாரேன். நம்மால் எதாவது கொடுக்க முடியுமான்னு"

"எனக்கு ஒண்ணுமே தோணலயே"

"இருக்கு நாகா இருக்கு."

"சொல்லுங்கோ, எனக்கே தெரியாமல் அப்படியென்ன இருக்கு!"

"சொன்னா கொடுப்பியா?"

"சத்தியமா கொடுப்பேன்"

"அவசரப்பட்டுச் சத்தியம் பண்ணிட்டே. இனிமே மாறமாட்டியே"

"அவசியமேயில்லே. அந்த நல்ல மனசுக்காரி கேட்கற மாதிரி என்னிடம் எது இருந்தாலும் கொடுப்பேன்."

"உன் மூத்த பெண் கனகாம்பரம் பேச்சைக்கேட்டுப் பிறபட்டுப் பேச்சு மாறமாட்டியே."

"மனசு கிடந்து அடிச்சுக்கறது. இவ்வளவு தூரம் எதுக்குப் பீடிகை போடறேள். சொல்லுங்கோ, கனகாம்பரம் பேச்செ கேட்டுப் பேச்சுமாற மாட்டேன். அதிலும் வினோத்துக்கு ஒரு நல்லது நடக்கப் போறதுன்னா அதில் வேறயாரும் தலையிட அனுமதிக்க மாட்டேன்... சொல்லுங்கோன்னா..."

"சரி அப்படியானா... வினோத்தைச் சாருலதா கல்யாணம் செஞ்சுக்க ஆசைப்படறா. அவங்க ரெண்டு பேரும் கல்யாணம் செஞ்சுக்க உன் சம்மதத்தைத் தெரிவிச்சுடு."

"நீங்க என்ன சொல்றேள், என்னால இதை நம்பவே முடியலயே"

''நம்பு நாகா. நான் சொல்றது உண்மை. அவர்கள் ரெண்டுபேரும் கல்யாணம் செய்து கொள்ள உன்னிடம் வந்து அனுமதிகேட்டா நீ மறுக்கக் கூடாது''

கணவனின் வார்த்தையால் உணர்ச்சி வசப்பட்டுப்போன நாகலெட்சுமி,

''அப்படியொரு ஆச்சரியம் நடக்குமான்னா, நீங்களும் நானும் இப்படியொரு பகல் கனவு வேணா காணலாம்.''

''கனவில்லே நாகா. நீ இதிலே சலனப்படாமல் மனப்பூர்வமா இருந்தா நடக்கும்'' என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே கனகாம்பரம் அங்கே வந்தாள்.

''என்ன நடக்கும்? அப்படியெல்லாம் நடக்க முடியாது. நான் நடக்கவும் விடமாட்டேன். அவ வினோத்துக்கு உதவினாள். அவனை நல்லபடியா மாற்றினாள் என்பதற்காக அவனைவிட அதிக வயதுக்காரியான அந்த ஏற்காட்டுக்காரியை அவளைவிடச் சின்னவனான நம்ப வினோத்துக்குக் கல்யாணம் செய்து வைக்கணுமா இதென்ன வேடிக்கை.'' முடியவே முடியாது. அம்மாவும் இதுக்குச் சம்மதம் தரவேமாட்டா. நீ சம்மதம் தராதம்மா.

ஒரு நல்ல விஷயம் பேசி சுமுகமானதோர் முடிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு ஆயுதம் போல குறுக்கே பாய்ந்தாள் சிவராமனின் மூத்த பெண் கனகாம்பரம்.

சிவராமன் ஆடிப்போய்விட்டார். வெண்ணெய் திரண்டுவரும் நேரத்தில் தாழியை உடைக்க வந்து நிற்கிறாளே!

ஏற்காடு சென்று வினோத்தைப் பார்த்துவிட்டு மலையிலிருந்து இறங்கும் போது ''நேரா்க'' ''அயோத்தியாபட்டணம் போக வேண்டும் என்று மனைவி சொல்லும் போதே மகளிடம்

எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் கூறிவிட்டுத்தான் வரப்போகிறாள் என்று அவருக்குத் தெரியும்.

''அவனைவிடச் சாருலதாவுக்கு வயசு ஜாஸ்த்தின்னு உன்னிடம் யாருடி சொன்னா... ஏதாவது நல்லது நடக்கும்போது குறுக்கே வந்து தடுக்கப் பார்க்காதே. உன் வேலையைப் பார்த்துண்டு போ'' சிவராமன் சத்தம் போட்டார்.

அவனைவிட அவளுக்கு வயசு ஜாஸ்த்தியாத்தான் இருக்கணும்னு அம்மாதான் சொன்னாள். பார்க்க ரொம்ப அழகா இருக்கா. அவள் ஒரு கோடீஸ்வரி, பங்களாவும் எஸ்டேட்டும் லட்சக் கணக்கிலே வியாபாரம் நடக்கிற பர்னிச்சர் மார்ட்டும்.. ராணி மாதிரி இருக்கா. நம்ம வினோத் மேலே உயிரையே வச்சிருக்கா. அவனையொரு குழந்தையைப் போல கவனித்துக் கொண்டிருக்கிறாள் – இப்படி அம்மா சொல்லும்போதே எனக்குத் தெரியும். பின்னால இப்படி ஏதாவது விபரீதம் வருமென்று... சுதாவை அழைத்துக் கொண்டு அவ அப்பா திருச்சியிலிருந்து வந்து ஒரு வாரமா கந்திண்டு இருக்கார்... அப்பா பேச்சைக் கேட்டு நீ அனாவசியமா குழம்பாதே. சுதாவுக்கு ஒரு நல்ல பதிலா செல்லி அவாளை ஊருக்கு அனுப்பி வை. சாருலதா கோடீஸ்வரியா இருந்தா அவளோட இருக்கட்டும்'' – என்று ஆக்ரோஷமாகப் பேசினாள் கனகாம்பரம்.

''அவனுக்கு ஒரு நல்லது நடக்கறதுன்னா உனக்கு பொறுக்காதே. உன்னிடம் ஒரு சில நாள் இருக்கறதுக்குள்ளே அவனுக்கு வயிறு நிறைய சோறுகூடப் போடாம விரட்டினவதானே நீ. அவனை அன்பா அரவணைத்துப் பாதுகாத்து அவனையும் ஒரு மத்த வாலிபர்கள் போல மாற்றினவடி அவள். தன்னைவிடச் சின்னவனா இருந்தாலும் பரவாயில்லை. ஏழையாக இருந்தாலும் பரவாயில்லையென்று அவள் அவனை விரும்பறா தெரியுமா?''

''நான் இதுக்குச் சம்மதம் தரவேமாட்டேன். அம்மாவையும் தரச் சொல்ல மாட்டேன்... அம்மா நீயும் தீர்மானமா சொல்லிடு. சாருலதா நம் அந்தஸ்த்துக்குச் சரிபட்டு வரமாட்டா. பிறகு நம்மை அவ மதிக்கவே மாட்டா.''

''அம்மாவுக்குக் கட்டளையிட நீ யார்? நீ இதில் புகுந்து கெடுக்காம இருக்கணுமேன்னு அப்பவே நினைச்சேன். நான் நெனச்சமாதிரி இதிலே நீ புகுந்துட்டே.''

''எனக்கென்னமோ நம்ம வினோத்துக்குச் சுதாவையே முடிச்சுடலாம்னு படறது. அம்மா நீ எதுக்கும் யோஜனையே பண்ணாதே. பளிச்சினு ஒரு முடிவெடு''

''நாகா, இவ உன் மகனுக்கு வர்ற நல்ல எதிர்காலத்தைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்க நினைக்கறா. பிறகு உன் இஷ்டம். ஆனா முடிவா நான் சொல்றேன், சாருலதாதான் இந்தாத்துக்கு நாட்டுப்பெண்ணா வரணும்..''

கணவன், மற்றும் மகள் ஆகியோரின் பேச்சினிடையே குறுக்கிடாமல் இருந்த நாகலெட்சுமி நிதானமாக ஆரம்பித்தாள்,

''நீங்க ஏன் கோபப்படறேள். கனகா பேசினா பேசட்டுமே, அவ மனசிலே பட்டதைப் பேசறா. அபிப்ராயங்களைச் சொல்ல அவளுக்கு உரிமையில்லையா என்ன? யார் எது சொன்னாலும் கடைசியிலே முடிவெடுக்கப்போறது நாமதானே! அவனோட எதிர் காலத்துக்கு எது நல்லது; இந்த அளவுக்கு அவனை உயர்த்தி இருக்கா என்று நமக்குத் தெரியாதா! நான் என்ன அத்தனை முட்டாளா. அந்த சாரு பெண்ணைப் பற்றி இவளுக்கு என்ன தெரியும். ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காகச் சொல்றா, சொல்லிட்டுப் போகட்டுமே. இங்கே வந்ததிலிருந்தே சுதா அழுது கொண்டேயிருக்கிறாள். அண்ணா இவளைக் கட்டாயப்படுத்தி இழுத்துண்டு வந்திருப்பாரோ

என்ற சந்தேகம் ஏற்படறது. அண்ணா கூட அவ பேசவேயில்லையாம். அவர் சொல்லிட்டு வருத்தப்படறார்.''

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போதே வேலியோரமாகக் கார் வந்து நிற்க அதிலிருந்து வினோத் மட்டும் இறங்கினான். அவன் நடையில் ஒரு வேகம் இருந்தது.

வேகமாக உள்ளே வந்தவன்,

''சுதாவை அழைத்துக் கொண்டு அத்தான் இங்கே வந்திருக்காரா'' – என்று பதட்டத்துடன் கேட்டான்.

''ஆமாம்'' – என்றாள் கனகாம்பரம் ''இப்போ அவ எங்கே'' – அவன் கேட்டு முடிக்கு முன் சுதா அங்கே அமுதவண்ணம் வந்து நின்றாள். அவளையே சிறிது நேரம் இமைகொட்டாமல் பார்த்தவன்,

''வா என்னுடன், உன்னிடம் கொஞ்சம் தனியே பேசவேண்டும் – அவள் கையைப் பிடித்து அவன் அழைத்துக் கொண்டு வெளியேற நினைத்தபோது கனகாம்பரம் அவனைத் தொடர்ந்து வர முயற்சித்தாள்.

''வேறுயாரும் எங்களுடன் வரவேண்டாம் என்றபோது கனகாம்பரம் பாதியிலேயே நின்றுவிட்டாள்.

நீர் வற்றிக் காய்ந்த ஆற்றுப் படுகையில் உட்கார்ந்து அவர்கள் நீண்ட நேரம் பேசினார்கள். அவள் உடல் குலுங்க அமுத வண்ணம் அவனிடம் பேசினாள்.

# 15

இந்த முறை வினோத்தின் செய்கைகளில் வயதின் முதிர்ச்சியும் அதற்கு உண்டான தன்மையும் தெரிந்தது, நிதானமாகப் பேசினான். முன்பிருந்த குழந்தைத்தனமோ, அசட்டுச்சிரிப்போ இல்லை.

பார்க்கும் பார்வையிலேகூட மாறுதல் தெரிந்தது.

வெளியில் வந்து நின்று தன் குடிசை வீட்டையும் அதைச் சுற்றியுள்ள காலி இடத்தையும் பார்த்தான்.

"அப்பா, நாம இப்போ குடியிருக்கற இந்த இடம் சேலம் பச்ச முத்துவோட இடம்தானே. இதை அவர் யாருக்கோ விலைபேசிக் கொண்டிருந்தாராம். சாருலதா போய் தடுத்து நிறுத்தியிருக்கா. அவர் இங்கே வந்தா ஏற்காட்டுக்கு வந்து என்னைப் பார்க்கச் சொல். என்ன விலையானாலும் பரவாயில்லை. இந்த இடத்தை வாங்கச் சொல்லிட்டா சாருலதா. "

சிவராமன் வியப்புடன் மகனைப் பார்த்தார்.

"அவளுக்கு இந்த ஸ்ரீனிவாசநல்லூர் ஆற்றோர கிராமம் ரொம்பப் பிடித்துவிட்டது. உங்களுக்காக அவள் இதை வாங்கப் போறா" என்றவன்,

"எனக்கு அங்கே நிறைய வேலையிருக்கு. நான் இல்லாம அவளால ஒரு நாள்கூட இருக்க முடியாது. நான் இங்கே சுதாவைப் பார்க்க அவசரமாக வந்தேன். இவளை என்னுடன் ஏற்காடு அழைத்துக்கொண்டு போக வேண்டுமே..."

"இவளை எதற்கு நீ ஏற்காடு அழைத்துக்கொண்டு போகவேண்டும்."

"காரணமிருக்கு அதை இப்பவே இங்கேயே சொல்லணுமா."

"நான் அவளோட அப்பா. நீ எதற்காக இவளை அங்கே அழைச்சிண்டு போகணும்னு சொல்றே. அதைச் சொன்னாத்தான் நான் சம்மதம் தருவேன்."

"இவளுடைய கல்யாணம் அங்கேதான் நிச்சயமாக வேண்டும்"

''கல்யாணம்னு சொல்றே சரி யாரோட; மாப்பிள்ளை யார். உன் அம்மாவின் சம்மதம் கேட்டு இவளை உனக்குப் பேசிமுடிக்க வேண்டுமென்ற முடிவோட இங்கேவந்தேன். ஆனா உன் அம்மாவும் அப்பாவும் ஒரு வாரமா இதைப்பற்றிப் பேசவே மாட்டேங்கறா. எதைக் கேட்டாலும் உன்னைக் கேட்கணும்னு உங்க அப்பா சொல்றார். உன் அம்மாவானா அவனை விட்டுடுங்கோ. அவன் மனசுப்படி அவன் யாரை விரும்பறானோ அவளையே பண்ணிக்கட்டும்னு விட்டுட்டேன். அதோடு ஏற்காட்லே அவன் மேலே உயிரையே வச்சிருக்கற பொண்ணு ஒருத்தி இவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள். கிட்டத்தட்ட அது தீர்மானமானதுதான். இதைத் தவிர வேறு ஏதாவது பேசுங்கோன்னு சொல்றா. என்னடா இதெல்லாம்.''

அம்மா சொன்னதுதான் உண்மை. சுதாவுக்காக என்னோட நண்பன் ஒருவன் ரொம்ப நாளா காத்துக் கொண்டிருக்கிறான்.

''இது கல்யாணம், சுப்புசாமி. கோபிக்காதே, வினோத். அவ இஷ்டப்படி முடிவெடுக்க விட்டுட முடியுமா!''

''அப்படியில்லே அத்தான்....''

''கல்யாணம்ங்கற போது அவ அபிப்ராயம் தானே முக்கியம்''.

''இவ என் பேச்சை தட்டமாட்டா''

''தட்டப் போறாளே... கேளுங்கோ, இவளுக்கு என்னைக் கல்யாணம் செஞ்சுக்கற விருப்பமே இல்லை...'' இவளைத் திருச்சியிலிருந்து வலுக்கட்டாயமா இங்கே அழைத்துக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கேள். குடும்பப் பாங்கா வளர்ந்து எல்லாமே நமக்கு அப்பா அம்மாதான் என்கிற மாதிரி வளர்ந்துவிட்ட சூழ்நிலையில் தன் விருப்பங்களை வெளியில் சொல்ல முடியாமல் தவித்துப் போய் அழத்தான் முடியும். சரி, அதுதான் போகட்டும்.

இங்கே வந்ததிலிருந்து உங்ககூடப் பேசப் பிடிக்காம தனியா உட்கார்ந்து அழுதுண்டே இருக்காளே. அதற்கான காரணத்தையாவது கேட்டேளா..? நீங்க கேட்டிருக்க மாட்டேள்... கேட்டிருக்கணும் அத்தான்... அப்பத்தானே அவள் மனசிலே என்ன இருக்குங்கறதை தெரிஞ்சிண்டிருக்க முடியும். அதைக் கேட்கவே... ஸ்ரீனிவாச நல்லூருக்கு உன்னோட வரமாட்டேன் என்று சொன்னவளை வலுக்கட்டாயமா இழுத்துக் கொண்டு வந்திருக்கேள் அதுதானே நடந்தது.... சரி போகட்டும்... இப்போ சுதாவுக்குக் கல்யாணம் பண்ணனும். நல்ல இடமா பையன் வேணும். அவளோட எதிர்காலம் நல்லபடியா அமையணும். ஒரு பெண்ணைப் பெற்ற தந்தையோட ஆசை, இதுக்கு மேலே இருக்க முடியாது.... சரி உங்க எதிர்பார்ப்பு, விருப்பம் எல்லாவற்றிற்கும் ஏற்ற மாதிரியே சுதாவோட கல்யாணம் நடக்கும்., சரிதானே.... சொல்லுங்கோ.... சரின்னு சொல்லுங்கோ..."

"மாப்பிள்ளை... அருணாஜலம் இழுத்தார். நல்ல மாப்பிள்ளை தான்... அவ விரும்பற மாப்பிள்ளை."

"...பையன் யார் என்று தெரிய வேண்டாமா...?"

"பையனை உங்களுக்கும் தெரியும். சுதாவுக்கும் தெரியும்... பூரண சம்மதத்தோட தைரியமா சுதாவை என்னுடன் ஏற்காடு அனுப்பி வையுங்கோ"

"நாங்க வரவேண்டாமா?"

"தாராளமா வரலாம்... காரில் ஏறிக்கொள்ளுங்கள்"

"என்னடா எல்லாம் ஒரே மர்மமா இருக்கு" – சிவராமன் கேட்டார்.

"மர்மமுமில்லை மாயமுமில்லை. எது எது எப்படி நடக்க வேண்டுமோ அப்படித்தான் நடக்கும். நடக்க போகிறது...."

வினோத்தின் பேச்சு, அவனது தோரணையெல்லாமே அவன் பெற்றோருக்குப் பெருமையாக இருந்தது.

"அப்பா உங்களுக்குப் பிறகு கார் அனுப்புகிறேன். அம்மாவை அழைத்துக்கொண்டு அப்பொழுது வந்தால் போதும். நான் அவசரமாகத் திரும்ப வேண்டியிருக்கு... சுதாவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு காருக்கு வந்தான். கூடவே சுதாவின் தந்தை அருணாஜலமும் வந்தார்.

கார் புறப்பட்டது.



வினோத்தும் காந்தராஜும் சிதம்பரத்திடம் வித்தை கற்க வந்தபோது நெருங்கிய நண்பரானவர்கள். காந்தராஜின் ஊர்கூட திருச்சி அருகில் உள்ள உத்தமர்கோயில் கிராமம்தான்.

வினோத்தும் அவனும் ஒரே கல்லூரியில் படித்தவர்கள். வித்தை கற்பதில் காந்தராஜ் அதிகம் சிரத்தை காட்டவில்லையோ அல்லது கிரகிப்புத்தன்மை குறைவோ தெரியவில்லை. சிதம்பரத்திடம் எப்பொழுதும் திட்டு வாங்கிக் கொண்டேயிருப்பான். அறிவு கெட்ட முண்டம் உன் மரமண்டையில் ஒன்றுமே ஏறாது என்பார். சிதம்பரத்திடம் திட்டு வாங்குவதைப் பார்க்கும் வினோத் அவனைத் தன்னுடன் அழைத்துச் சென்று சிதம்பரம் தனக்குக் கற்பித்ததை நிதானமாகப் பொறுமை இழக்காமல் அவனுக்குக் கற்பிப்பான். அப்பொழுதும்கூட அவ்வளவு ஆர்வமாகக் கற்றுக் கொண்டான் என்று சொல்ல முடியாது. வினோத்தைப் போலவே அவனையும் அவர் தன்னுடைய சிஷ்யனாக வைத்துக் கொண்டிருந்த காரணத்தால் அவனுடைய படிப்புப் பிரச்னை, சாப்பாடு மற்றும் இருப்பிடப் பிரச்னையில்லாமல் இருந்தது. இந்த காரணங்களினாலேயே காந்தராஜ் அங்கே இருந்தான்.

சிதம்பரத்தின் எதிர்பாராத மரணம், வினோத்தின் மனநிலை பாதிப்பு, அவன் வாழ்க்கைப் போக்கையும் பாதித்தது.

இந்த எதிர்பாராத சம்பவங்கள் நடக்குமுன்பே அவன் வினோத்திடம் வர்மக்கலையைக் கற்றுக்கொண்டு விட்டான். அக்கலையைப் பொறுத்தவரையில் அவன்தான் காந்தராஜின் குரு.

திடகாத்திரமான உடம்பு. கையும் புஜங்களும் அசாதாரண செழிப்புடன் தெரியும். பார்த்த மாத்திரத்தில் அச்சம் ஏற்படுத்தும் பார்வை, அவனிடம் இயல்பாக அமைந்த இந்த இயற்கை வளர்ச்சியும் அவன் கற்ற வர்மக்கலையும் அவனை மெதுவாக வேறு திசைக்குத் திருப்பிவிட முயன்றது. அவனுக்குப் பணம் கொடுத்து எதிரிகளைத் தாக்குவதற்கும் எதிரிகளை மிரட்டுவதற்கும் அவனைப் பயன்படுத்திக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

வர்மக்கலையில் மிகப் பிரபலமாகி விட்டான். அதில் அவனுக்குப் பல சவுகரியங்கள் தானாக வந்தன.

காந்தராஜைப் பற்றிக் கேள்விப்பட்ட பிரபாகர் அவனைத் திருச்சிக்குச் சென்று சந்தித்தான். அவனுடன் பேசினான். பிரபாகரின் கோரிக்கைக்கு அவன் முதலில் சம்மதிக்கவேயில்லை. ஆனால் நிறைய பணத்தை அவன் முன் நீட்டியவுடன் அவன் மனம் சபலப்பட்டது. என்றாலும் ஒரு விஷயத்தில் மட்டும் தீர்மானமாக இருந்தான். எதிரியை ஒரேயடியாக அழிக்கிற மாதிரி எதுவும் செய்யமாட்டேன். நிரந்தரமாக முடமாக்க மாட்டேன். எனது பலம் எப்படிப்பட்டது என்பதை எதிரி உணரும்படி ஓர் அச்சத்தை மட்டும் ஏற்படுத்தி மறுபடியும் நம் வழியில் வராமல் இருக்கும்படி மட்டுமே செய்வேன் என்ற நிபந்தனையை முன்வைத்தான்.

எனக்கு இக்கலையைக் கற்பித்த குரு இந்த நிபந்தனைகளைக் கூறி என்னிடம் சத்தியம் வாங்கிக் கொண்ட பின்புதான் எனக்கு

வர்மக்கலை கற்பித்தார் என்று கூறிவிட்டதால், அவன் நிபந்தனையைப் பிரபாகர் பாதிமனதுடன் ஏற்றுக் கொண்டுவிட்டான்.

எதிரியைச் சந்திக்க வேண்டிய இடம் சேலம் ஏற்காடு என்று பிரபாகர் சொன்னபோது அவன் உடனே உற்சாகமாகி விட்டான். அவன் நண்பனும் குருவுமான வினோத் அங்கேதான் ஓர் எஸ்டேட்டில் நல்ல செல்வாக்கான நிலையில் இருக்கிறான் என்று வினோத்தின் பெற்றோர் கூறியது அவன் சந்தோஷத்தை அதிகமாக்கியிருந்தது. அதைவிட மற்றொன்று சுதாவுக்கும் அவனுக்கும் உள்ள காதல்.

சுதாவும், காந்தராஜும் சில நாட்கள் ஒரு பிரைமரி ஸ்கூலில் சேர்ந்து வேலை பார்த்தனர். தாற்காலிக உத்யோகம்தான். இருவருமே ஆசிரியர் பயிற்சி பெறாதவர்கள் என்பதால் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் கிடைத்தவுடன் அவர்கள் உத்யோகமும் போய்விட்டது.

அவர்களது காதல் அருணாஜலத்திற்குத் தெரிந்தபோது அதற்கு அவர் சம்மதிக்க மறுத்துவிட்டார். ஏற்கனவே காந்தராஜைப் பற்றி அவருக்கு நன்றாகவே தெரியும். அவனைப் பற்றி எப்பொழுதுமே ஒரு நல்ல அபிப்ராயமே அவரிடம் இருந்ததில்லை. "வெறும்பய, வெட்டிப்பய, ஊரில் பெரிய 'தாதா'ங்கற நினைப்பு. எங்கே அடி தடின்னாலும் இவன் பேர் முதலில் அங்கே அடிபடறது. அவன் ஒரு நாளும் இந்த வீட்டிற்கு மாப்பிள்ளையாக வர முடியாது" என்று சத்தம் போட்டுவிட்டுச் சுதாவை வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு தங்கை நாகலெட்சுமிடம் பேச ஸ்ரீனிவாசநல்லூர் வந்துவிட்டார்.

பிரபாகருடன் ஏற்காடு வந்த காந்தராஜ், தன் வேலையை முடித்து விட்டு வினோத்தைச் சந்திக்கலாம் என்று திட்டம் போட்டிருந்தான் தான் தாக்க வேண்டியது வினோத்தான் என்பது தெரியாமல்.......

# 16

தன்னுடைய கொம்பேறி வர்மத்தாக்குதலிலிருந்து தன் நண்பன் காந்தராஜை முற்றிலும் சரி செய்து விட்டான்.

ரொம்ப நாள் பிரிவுக்குப்பின்னால் நடுவில் நடந்த சம்பவங்களை இரண்டு நண்பர்களும் மனம் விட்டுப் பேசிக் கொண்டனர். நல்ல உத்யோகம் கிடைக்காமல் அலைந்தது. தாற்காலிகமாக உத்தியோகத்திற்குப் போன இடத்தில் சுதாவுக்கும் அவனுக்கும் ஏற்பட்ட காதல், அருணாஜலத்தின் எதிர்ப்பு என்று கூறிவிட்டு அவனைச் சந்திக்க ஏற்காடு வர திட்டமிட்டிருந்தபோது பணத்திற்கு ஆசைப்பட்டு பிரபாகர் வார்த்தையை நம்பி இங்கே வந்தது - என்று எல்லாவற்றையும் விவரித்தான்.

அவன் சொல்லித்தான் சுதா இப்பொழுது ஸ்ரீனிவாசநல்லூரில் இருக்கிறாள் என்கிற விஷயமும் தெரிந்தது.

அவனைச் சாருலதாவிற்கு அறிமுகப்படுத்தி வைத்தான். பட்டதாரியான நண்பனுக்கு ஒரு நல்ல உத்தியோகத்திற்கு ஏற்பாடு செய்து தரும்படி வினோத் கேட்டபோது அவளும் அதற்கு உடனே உதவுவதாக வாக்குறுதி தந்தாள்.



நண்பனுடன் பேசிவிட்டு நீண்ட நேரம் யோசனையில் ஆழ்ந்தான் வினோத். உடனடியாகக் கவனிக்க வேண்டிய வேலைகள் நிறைய இருப்பதாகத் தோன்றியது. எல்லாவற்றையும் நிதானமாக பதட்டமின்றிச் செய்ய வேண்டும் என்ற முடிவுக்கு வந்தவன், இரவு பூராவும் தன் அறையில் நண்பனுடன் பல விஷயங்களைப் பற்றிப் பேசினான்.

சாருலதாவின் அன்பு, தான் சுப்புடு மாமாவின் உதவியால் இங்கே வந்தது. படிப்படியா சாருலதாவின் அபிமானத்திற்கு

பாத்திரமானது, அவளுடைய கபடமற்ற சுபாவத்தினால் கவரப்பட்டது, அவளுடைய தனியான வாழ்க்கையில் பிரபாகர் தேவதாஸ் ஆகியோர் குறுக்கிட்டு அவளை மிரட்டிக் கொண்டிருப்பது, முதலில் அவளுக்குப் பாதுகாப்பாக இருந்து அவளை அந்த அயோக்கியர்களின் மிரட்டலிலிருந்து பாதுகாத்தது - என்று கடைசியில் டாக்டர் சடகோபனைச் சந்தித்தது வரை கூற, விடிந்தது.

தோட்டத்தில் ரோஜாச் செடியருகில் நின்று கொண்டிருந்த சாருலதாவிடம் வந்து தயங்கியபடி நின்றான் வினோத்.

''நான் ஸ்ரீனிவாசநல்லூர் வரை உடனே போகவேண்டும். டிரைவருடன் மாலைவரை கார் தர முடியுமா'' என்று மிகுந்த பணிவுடன் கேட்டான்.

''உங்களுக்கு இல்லாத காரா, தாராளமாக எடுத்துக் கொண்டு போங்கள். என்ன விஷயமென்று சொன்னால் நானும் தெரிந்து கொள்வேன்''

''சாயங்காலம் திரும்பிவிடுவேன். அப்பொழுது நீயே தெரிந்து கொள்வாய்''

''உங்கள் நண்பர் வருகிறாரா''

''இல்லை. காந்தராஜ் இங்கேதான் இருப்பான்''

''துணைக்கு?''

''துணையா எனக்கா....? உன்னைவிட இந்த உலகில் எனக்கு வேறு யார் துணைக்கு வர முடியும்...? மனிதனுக்கு அவனது பலம் மட்டும் துணையில்லை. அதற்கு அப்பால் மானசீகமான துணைக்கு எவ்வளவோ உண்டு....''

அவன் மிகுந்த நெகிழ்ச்சியுடன் கூறினான். அப்படி அவன் கூறும்போது அவன் கரத்தைப் பற்றி இறுக்கினாள் அவள்.

அடுத்த அரை மணி நேரத்திற்கெல்லாம் அவன் புறப்பட்டு விட்டான்.



இப்பொழுது சாருலதாவைப் போலவே காந்தராஜும் அவன் வருகைக்காக காத்திருந்தனர்.



மாலை நேரம்....

ஏற்காடு மாலையில் குளிர் காற்று வேகமாக வீசத் தொடங்கி விட்டது.

சாருலதாவின் எஸ்டேட் பங்களா காம்பௌண்ட்டுக்குள் மெதுவாக நுழைந்தது.

பின்பு நிதான வேகத்துடன் வந்து நின்றது.

காரிலிருந்து ஒரு பெண்ணுடன் வினோத் இறங்குவதை மாடி வராந்தாவில் நின்றுகொண்டிருந்த சாருலதா பார்த்துவிட்டு அதிர்ச்சி அடைந்தாள்.

''யார் இவள்?''

அவசரமாக ஸ்ரீனிவாசநல்லூர் போகவேண்டும், கார் தரமுடியுமா என்று வினயமாகக் கேட்டபோது என்ன இவர் இவ்வளவு தயக்கப்படுகிறார். இங்கே இனி எல்லாமே இவருடையது தானே என நினைத்துக் கொண்டவள், காரை எடுத்துப் போக அனுமதியும் தந்தாள்.

அஸ்தமிப்பதற்குள் திரும்பி வந்து விடுவேன் என்று சொல்லி விட்டுப் போனவர் இதோ ஓர் அழகான அவரைவிட வயதில் சின்னவளான ஒரு பெண்ணுடன் வந்து இறங்குகிறாரே?

மெதுவாக அவனைப்பற்றி அவள் கொண்டிருந்த நம்பிக்கைகள் சிதைந்து கொண்டிருப்பதுபோல் உணர்ந்தாள்.

இத்தனை காலம் இவருக்காக நான் பட்ட சிரமங்கள் எல்லாம் வீண்தானா?

அளவுக்கு அதிகமாக இவர் மேல் நம்பிக்கை வைத்தது தவறோ?

வினோத்தின் உள்மனதில் என்ன இருக்கிறது, யார் இருக்கிறாள் என்று தெரிந்து கொள்ளாமல் ஆசைகளை வளர்த்துக் கொண்டுவிட்டோமோ?

என்னைவிட இளமையான ஒரு பெண்ணைப் பார்த்தவுடன் அவரது அப்பா அம்மாவின் நிர்பந்தத்திற்குப் பணிந்து வேறு மாதிரியான முடிவு எடுத்திருப்பாரோ?

நெஞ்சில் ஒரு படபடப்பு. நினைவில் யூகங்களின் வேகத்தைத் தடுக்க முடியாதவளாக மாடியை விட்டுக் கீழே இறங்கி தோட்டப் பகுதிக்கு வந்தாள்.

சுதாவுடன் வினோத் காரிலிருந்து இறங்குவதைத் தோட்டத்தின் ஒரு பகுதியில் நின்று பார்த்துவிட்ட காந்தராஜ் வேகமாக அவர்களிடம் வந்தான்.

காந்தராஜை அங்கே பார்த்தவுடன் சுதா ஓடிச் சென்று அவனது இரு கரங்களையும் பற்றிக் கொண்டாள்.

மாடி வராந்தாவிலிருந்து இறங்கி வந்தவள் சுதாவை மிக அருகில் பார்த்தபோது, அவள் மேலும் அழகாக இருப்பதைத் தெரிந்துகொண்டாள்.

அவள் பார்வை சோர்வுடன் வினோத் பக்கம் திரும்பியது.

"வினோத் என்ன இதெல்லாம், யார் இது..."

அவனிடமிருந்து என்னபதில் வரப்போகிறதோ என்ற நடுக்கமும் அவள் மனதில் இருந்தது.

ரொம்ப நேரம் காரிலேயே அமர்ந்து, தான் வந்து சேர்ந்திருக்கிற மலைகள் சூழ்ந்த இடத்தைப் பிரமிப்புடன் பார்த்துக்கொண்டே அருணாஜலம் மெதுவாகக் காரைவிட்டுக் கீழே இறங்கினார்.

வினோத், சாருலதாவைத் தனியே அழைத்துப் போய் நடந்தவை, இப்பொழுது நடப்பவை, இனி நடக்க வேண்டியவை என்று எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் கூறினபோதுதான் அவள் மனம் சற்று முன் இருந்த அதிர்ச்சியின் பிடியிலிருந்து விடுபட்டது.

வினோத், சுதா - காந்தராஜ் காதல், காந்தராஜின் வேலையற்ற பிரச்னை ஆகியவை பற்றிக் கூறியிருந்தானாகையால் அருணா ஜலத்திடம் அவளே நேரிடையாகப் பேசினாள்.

''காந்தராஜ் ஓர் ஒழுங்கான வாலிபன். பட்டதாரி. அவருக்கு வேலையில்லையே எப்படிப் பெண்ணைக் கொடுப்பது என்று தயங்க வேண்டாம். அவருக்கு ஒரு நல்ல வேலைக்கு நான் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறேன். அவருக்குத் தாராளமாகச் சுதாவை கொடுக்கலாம்'' – என்று அவள் சொன்னபோது அருணாஜலம் அவளைக் கையெடுத்துக் கும்பிட்டார்.

''நீங்க சந்தோஷமா பெண்ணை அழைத்துக் கொண்டு திருச்சிக்குப் போங்கோ. திருமண ஏற்பாட்டைச் செய்யுங்கள். நானும் வினோத்தும் நேரா வந்து அதைப் பிரமாதமா நடத்தி வைக்கிறோம். இனி உங்க பெண்ணோட கல்யாணம், வரப்போகிற மாப்பிள்ளையின் வேலை விஷயம் எதைப்பற்றியும் கவலைப்படாம போங்க... டிரைவர் இவங்க இன்று இரவு நம்ம பங்களாவிலே தங்கிட்டுக் காலமே புறப்படுவாங்க. ஏற்காட்டைச் சுற்றி காண்பிச்சுட்டு, சேலத்திற்குப் போய் திருச்சி பஸ்ஸில் ஏற்றி அனுப்பிச்சுட்டு வந்துடுங்க...''

சுதா சாருலதாவின் அருகில் வந்து நின்றபோது அவள் கண்கள் கலங்கிப் போயிருந்தன.... அவளை அன்புடன் அணைத்துக் கொண்டு பங்களாவிற்குள் நுழைய இருந்தபோது அங்கே ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து பிரபாகரும் தேவதாசும் மிகுந்த தயக்கத்துடன் இறங்கினார்கள்.

பிரபாகர் கையில் ஒரு பெட்டி இருந்தது. சாருலதாவை அவர்கள் நெருங்கி வந்தபோது காந்தராஜூம் வினோத்தும் சாருலதாவின் இரண்டு பக்கமும் அரண்போல வந்து நின்றனர்.

''இதுவரையிலே உங்களுக்குக் கொடுத்த தொல்லைகளை மனசிலே வச்சுக்காதீங்க. பங்களா வாங்கித் தருவதா சொல்லி உங்ககிட்டே வாங்கின பணத்திலே இதிலே பத்துலட்ச ரூபாய் இருக்கு. மீதித் தொகையைக் கொஞ்சம் கொஞ்சமா அப்பப்ப கொண்டுவந்து கொடுத்துடறேன். நீங்க போலீஸ்ல கொடுத்த ரிபோர்ட்டை.......''

''போலீஸ் ரிபோர்ட்டா. அதை நான் முன்பே வாங்கி கிழிச்சுப் போட்டுட்டேன். தேவதாஸ் என் வியாபாரத்தில் எனக்குப் போட்டியாளரே தவிர விரோதியா நான் என்னிக்குமே பார்த்ததில்லை. ஒருவேளை அவரு அப்படி நினைச்சுகிட்டு இருக்கலாம். இந்தப் பணத்தை அவரிடம் கொடுத்து அவரிடம் கூட்டு சேர்ந்து வியாபாரம் பண்ணுங்க. பத்தை நூறாக்கக்கூடிய திறமை உள்ளவர் அவர்.''

''இல்லே சாருலதா, இதை நீங்க வாங்கிக் கொண்டால்தான் எங்களுக்குத் திருப்தியா இருக்கும்.''

''இருக்கட்டும். இந்தப் பணத்தை நான் உங்களுக்கு கடனா கொடுத்ததா வச்சுக்கங்க. வியாபாரத்திலே போட்டு நிறைய லாபம் வரும்போது கொஞ்சம் கொஞ்சமா திருப்பிக்கொடுங்க. அப்ப நான் கட்டாயமா திருப்பி வாங்கிக்கறேன்.''

பிரபாகர் கண்கள் கலங்கின.

''நீங்க ஒரு மகத்தான பெண். உங்களைப் புரிந்து கொள்ளாத முட்டாளா இத்தனை நாள் இருந்துட்டேன். உங்களை என்னால் மறக்கவே முடியாது.''

''நான் உங்களை எப்பவோ மறந்துட்டேன்'' ஏனோ தெரியவில்லை அவள் குரல்கூட உடைந்திருந்தது.

அதற்குமேல் அவள் அங்கே நிற்கவில்லை. வினோத், காந்தராஜ் ஆகியோருடன் சினேகமாகக் கை குலுக்கிவிட்டு அவர்கள் காரில் புறப்பட்டார்கள்.



காலையில் சுதா, அருணாஜலம் ஆகியோருக்கு ஏற்காட்டை சுற்றிக்காட்டிவிட்டு அவர்களைத் திருச்சி பஸ்ஸில் ஏற்றிவிடக் காந்தராஜ் சேலம் போய்விட்டான்.

மாடி அறையில் தனியே இருந்தாள் சாருலதா. அவள் அருகில் வந்து நின்றான் வினோத்.

''அப்பா அம்மா இங்கே வரப்போகிறார்கள். உனது விருப்பத்திற்கு அவர்களுடைய சம்மதத்தை அவர்கள் வாய் மூலமாகவே நீ கேட்கலாம்.''

வினோத்தை உணர்ச்சி பொங்க கட்டி அணைத்துக் கொண்டாள்.

வினோத் என் வாழ்க்கையில் உங்களைச் சந்தித்த பின்புதான் மகத்தான மாறுதல்கள் எல்லாம் நடந்திருக்கின்றன. ஒரு பெண் என்பவள் யார், அவளுடைய பலம் என்பது என்ன ? என்பதை நீங்கள் என் அருகில் இருக்கும்போதுதான் தெரிந்து கொண்டேன்.

ஜன்னலுக்கு வெளியே மலைச் சரிவில் சவுக்கு மரங்களும், பட்டை உரித்துக் கொண்டு நிற்கும் தைலமரங்களும், நீல நிறப் பூக்களைக் கொண்ட வாதா நாராயண மரங்களும் காற்றில் ஆடின.

காற்றின் சிலிம்பலில் வாகை மரத்தின் வெளிர்நீலப் பூக்கள் சதா உதிர்ந்து கொண்டேயிருந்தன.

சாருலதாவும் வினோத்தும் மாடி அறையில் ஆலிங்கனத்தை அவிழ்க்க மனமின்றிக் கட்டுண்டு கிடந்தனர்.

**உன் இதழ்கள் தேன்**
**உன் முகமும் தேன்**
**உன் கண்களும் தேன்**
**உன் இதயம் தேன்**
**உன் பெயரை உச்சரிப்பதே தேன்**

என்று பொருள்படும், சுதாரகுநாதன் பாடும்

**அதரம் மதுரம்**
**வதனம் மதுரம்**
**நயனம் மதுரம்**
**ஹஸிதம் மதுரம்**

என்ற ஸ்ரீ வல்லபாச்சாரியரின் ஹரி காம்போதி ராக மதுரமான கீதம் பங்களாவின் கீழே முன் ஹாலில் ஒலித்துக் கொண்டிருந்தது.



# சுவாதி பதிப்பகம்

# எமது சிறந்த வெளியீடுகள்

## நாவல்

| | | |
|---|---|---|
| 1. கொன்றை மலர்க்குமரி | விக்கிரமன் | ரூ. 45.00 |
| 2. பாண்டிய மகுடம் | " | ரூ. 85.00 |
| 3. வெள்ளைத் தாமரை | அய்க்கண் | ரூ. 50.00 |
| 4. ஒரு கிராமத்துப் பெண் | நாகராஜகுமார் | ரூ. 42.00 |
| 5. காலம் தவறிப் பெய்தமழை | நீலவன் | ரூ. 30.00 |
| 6. பரிசு | சரசுவதி அமுதன் | ரூ. 70.00 |
| 7. மீண்டும் ஒரு பூ மலரும் | அருள்நம்பி | ரூ. 60.00 |

## சிறுகதை

| | | |
|---|---|---|
| 8. பெண் உளவாளிகள் | ரா. வேங்கடசாமி | ரூ. 38.00 |
| 9. வேம்பு பூத்திருக்கு | அருள்நம்பி | ரூ. 40.00 |
| 10. பிரம்மாக்கள் | " | ரூ. 45.00 |
| 11. வண்ணக் கனவுகள் | அய்க்கண் | ரூ. 60.00 |
| 12. நெல்லிக்கணி (வரலாற்றுச் சிறுகதைகள்) | " | ரூ. 60.00 |
| 13. பெண்ணின் பரிணாமங்கள் | " | ரூ. 40.00 |
| 14. ஒன்றில் இரண்டு | " | ரூ. 52.00 |
| 15. நானும் நந்தகுமாரும் | நாகராஜகுமார் | ரூ. 40.00 |
| 16. கை விளக்கு | நீலவன் | ரூ. 65.00 |
| 17. மன்னர் வாழ்வில் சுவையான கதைகள் | அருள்நம்பி | ரூ. 65.00 |
| 18. ஆகவே காதல் செய்வீர் | அ. அய்யாக்கண்ணு | ரூ. 48.00 |
| 19. செவ்வல்லி (பிறநாட்டுச் சிறுகதைகள்) | நலங்கிள்ளி | ரூ. 25.00 |
| 20. கடமையும் கடைவிழியும் | கலைமாமணி விக்கிரமன் | ரூ. 35.00 |
| 21. ஒரு கிராமத்து மணம் | ருக்மணி சேஷசாயி | ரூ. 65.00 |

## அறிவியல்

22. மாசற்ற சுற்றுச் சூழலும்
    மனிச மேம்பாடும் அருள்நம்பி ரூ. 30.00
    (தமிழக அரசின் முதற்பரிசு பெற்றது)

## சிறுவர் நூல்

23. மனிதசக்தியின் மகத்தான சாதனைகள் - அருள்நம்பி ரூ. 30.00

## கவிதை

24. வரத கோவிந்தராசன் கவிதைகள் ரூ. 50.00
25. வெளிச்சம் திருச்சி தியாகராசன் ரூ. 30.00
26. இசைத்தமிழ் ,, ரூ. 50.00
27. சவகர்லால் கவிதைகள் டாக்டர் சவகர்லால் ரூ. 42.00
    (தமிழக அரசின் முதற்பரிசு பெற்றது)

## பொது

28. தொடரும் பயணங்கள் (பயணக்கட்டுரைகள்)
    நாகராஜகுமார் ரூ. 50.00
29. காவேரிக்கரைக் குயிலோசை திருச்சி தியாகராஜன் ரூ. 50.00
30. சமுதாய சாட்சிகள் ,, ரூ. 90.00
31. சிவஞான சித்தியார் சுபக்கம் (விளக்கவுரை)
    நலங்கிள்ளி ரூ. 90.00
32. மனிதகுமாரன் இயேசுபிரான் ,, ரூ. 75.00
33. வங்கக் கவிஞர் தாகூரும்
    சந்தக்கவிஞர் கண்ணதாசனும் ப.குணசேகரன் ரூ. 30.00
34. வள்ளுவர் வழங்கும் மருந்து (அ.காசி) ரூ. 25.00



